**சோதிட கலாநிதி ஆசிரியர், வேலூர்-வேலப்பாடி**
**வ. கு. வேலு நாயகர் அவர்கள் இயற்றிய**

# ஜாதக சாகரம்

## மூலமும், விருத்தியுரையும்.

இந்நூலானது ஜோதிஷாபிமானிகளுக்கு ஒரு கற்பகத்தரு வென்றே தாகும். ஏனெனில் இதன் ஆசிரியர், பலவித (கணிதாதி) ஜோதிஷ கிரந்தகர்த்தர்களின், ஜோதிஷ கிரந்தங்களை பரிசீலித்து உள்ளங்கை நெல்லிக்கனி யென வெகு எளிய நடையிலும் வெகு உண்மையை உண்மையாகவே ஏற்ற பொருத்தமான, சுலோக, வசன, விருத்த பூர்வங்களாக சேர்த்து அமைத்து வெளியிட்டிருப்பது நம் தமிழ் உலகினரின் பாக்கியமேயாம். இந்நூலால் ஜாதகங்களில் ஏற்படக்கூடிய ஜன்ம லக்கினப் பிழைகளைத் திருத்தி, லக்னத்தை சுத்தம் செய்துகொள்ளும்படியும், சற்போதத்தில லக்ன சோதனையும், ஷோடசவர்க்கங்களையும் மற்றும் பாவ ஸ்புடத்தை வெகு எளிதாக (திருக்கணித) பஞ்சாங்கத்தினால் கிரக சாரங்களைக் கொண்டே கிரகங்களின் ஸ்புடத்தையும், லக்ன, பாவாதி ஸ்புடங்களையும், அங்கங்கு பதங்களுடன் சுலபமாக அறியும்படி விளக்கியிருக்கின்றார். அன்றி உலகில் ஜோதிஷ ஸூக்ஷமத்தை அறிவிக்கக்கூடிய நூல்கள் தாஜிகங்களே. அப்படிப்பட்ட தாஜிகங்களை ஆசிரியர் யவனதாஜிகம் யாதவ தாஜிகம், மாதவ தாஜிகம், நீலகண்ட தாஜிகம் முதலிய பல தாஜிகங்களையே கொண்டும், தாஜிகத்தின் உண்மையை எவ்வளவும் குறைவின்றி வெகு வெகு சுலுவாக அறிந்து கொள்ளும்படி விளக்கி யிருப்பது போற்றத் தகுந்ததாகும். இதற்கு இரண்டாம் பாகமும் அச்சிடப்படுகின்றது. இதில் மற்றொரு விசேஷ அம்சம் என்னவெனில் பிறந்த வருஷம் வயது பூர்த்தியாகும் வருஷ பிரவேச, மாத பிரவேச, தின பிரவேசாதிகள் பூர்த்தியாகும் கால, லக்னம், மாதம், வாரம், இவைகளும் தெசையில் ஆரம்பகால வயதும் தசாம்ச ராசி விபரமும், அவற்றின் பலனும் சொல்லப்பட்டிருப்பதால் தான் இதுவரை வெளிவந்துள்ள ஜோதிஷ புத்தகங்களை எல்லாவற்றையும் விட இது சிறந்த ஜோதிஷ கற்பகத்தரு, என்பதற்குப் பொருத்தமாகும். இந்த ஜாதக சாகரத்தின் இரண்டாம் பாகத்தைப் பூர்த்திசெய்து இதில் புதிதாக ஆரம்ப முதல் கோசார பலனும் தெசைபுத்தி அந்த ஸூக்ஷம பலனை தெசை வரை பலனும் எழுதி யிருப்பது போற்றத் தக்கினதே. இந்த இரண்டாம் பாகத்தை எழுதிப் பூர்த்திபெறச் செய்பவர் தமது ஜோதிஷ பாவத்திரய நிர்ணயத்தின் ஆசிரியரான ஸ்ரீமான் லக்ஷிமீ நரஸிம்மாசாரியாரவர் இப்படிப்பட்ட புத்தகத்தை வைத்துக்கொண்டு தம்பலனை அறிந்து பலனை யடையாதவர்கள் வெண்ணெயை வைத்துக்கொண்டு நெய்யில்லை என்பவர்களுக் கொப்பானவர்களே யாவர். இப் புத்தகத்தில் கூறியுள்ள ரகசிய விளக்கத்தை எழுதி ஆகாது. இதை பெறுபவரே அறிவார்.

ஜாதக சாகரம் முன் விலை ரூ. 5–14–0. தற்போது விலை ரூ. 3.

'ஆனந்தபோதினி' டேபில் ஆப் பாவாஸ் (அச்சில்)

ஜாதகசாகரம் 2-ம் பாகம் (அச்சில்) கூடிய சீக்கிரம் வெளிவரும்

---

**ஆனந்தபோதினி ஆபீஸ், தபால்பெட்டி நே, 167, மதராஸ்.**

# நாலடியார் மூலமும்
## விரிவான உரையும்.

செம்பூர் வித்வான்-ஸ்ரீ. ஆறுமுகஞ் சேர்வை அவர்களைக்கொண்டு இந்நூல், மிகத் தெளிவாகவும், விரிவாகவும் பழைய உரைகளையும் தழுவிப் புதிதாக எழுதப்பட்ட சிறந்த உரையுடன் வெளிவந்திருக்கிறது.

இந் நாலடியார் என்னும் நூலானது, ஏறக்குறைய இரண்டாயிரம் வருடங்களுக்குமுன் கடைச்சங்க காலத்தில், பாண்டியனிடம் வந்திருந்த ஜைன முனிவர் பலரால் தனித்தனி வெண்பாக்களாக இயற்றப்பட்டு பின்னர் அப்பாண்டியனால் தொகுக்கப்பட்டுப் பெயரிடப்பட்ட சிறந்த நீதி நூலாகும். உலகத்தில் பல தேசத்தாராலும், பல சமயத்தாராலும் கொண்டாடப்படும் திருக்குறளோடு ஒப்புமை யுடையது, உலகத்தார் பலருக்கும் பொதுவாகப் பற்பல நீதிகளை எடுத்துரைக்கக கூடியது. உலகத்தில் மனிதர்க்குப் பயன்தரத் தக்க நூல்களில் இது சிறந்ததாகும். பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் இது முதன்மை பெற்றதாகும். மனிதர் அடையவேண்டிய அறம், பொருள், இன்பம், வீடு என்னும் புருடார்த்தங்கள் நான்கினையும் அடைதற்கு இந்நூல் நல்ல வழிகாட்டி யாகும். மாணவர்களும், மற்றவர்களும் அவசியம் படிக்கத் தக்க நூலாகும். விலை ரூ 2—8—0.

ஆனந்தபோதினி ஆபீஸ் தபால் பெட்டி நெ. 167, மதராஸ்

---

# ரூ. 50,000 பெறுமானமுள்ள நகைகள்
## கொடுத்தாய்விட்டது




"அமெரிக்கன் நியூ கோல்ட்" உலகத்திலேயே எட்டாவது அதிசயம் என்று சொன்னால் மிகையாகாது. அதன் உயர்வு அனைவரும் அறிந்ததே. இந்தியா வெங்கும், பத்திரிகைகளாலும் பொது ஜனங்களாலும் 'என்றுமே கறுக்காத கெமிகல் கோல்ட் இது ஒன்றே' என்று ஒரு முகமாகப் புகழப் படுவது. இதிலிருந்து அதி நுட்பமானதும் நாகரீகமாயுமுள்ள விதவிதமான ஆபரணங்கள் தயாரிக்கலாம்.

எங்களுடைய "அமெரிக்கன் நியூ கோல்"டை இன்னும் பிரபலமாக்குவதற்காக இப்பொழுதே எழுதுபவர்களுக்கு கீழ்க்கண்ட சாம்பிள்கள் அடங்கிய செட்டை விநியோகிக்கத் தீர்மானித்திருக்கிறோம்: 6 தோலா அமெரிக்கன் நியூ கோல்ட், 2 ஜதை வளையல்கள், 2 ஜதை சம்மல்கள், 2 மோதிரம், எல்லாம் அழகிய வேலைப் பாடமைந்தவை. இத்துடன் சித்திரங்களுடன் கூடிய கேட்லாக்.

**American New Gold Co., (S. O. K.) P.B. No 61, Lahore (India)**

# அரசூர் இலக்ஷ்மணன்

## அல்லது அதியற்புதக் கள்ளன்.

இந்நாவலில் அரசூர் இலக்ஷ்மணனது சாமர்த்தியச் செயல்களும், அதிசயத் திருட்டுகளும், சுரங்க என்ஜினீரும், நூதன நீர்மூழ்கிக் கப்பலைச் செய்யும் முறைகளைத் தெரிந்தவருமான லோகநாயகன் என்பவர் என்ன ஆனார் என்பதைப் போலீசாரும், துப்பறிபவர்களும் கண்டுபிடிக்க முடியாமலிருக்க இவ்வரசூர் இலக்ஷ்மணன் அவ்வுண்மையைக் கண்டுபிடிப்பதும், கொலைகாரர்களான எத்தூர் வீரண்ணனையும் அவனது சகோதரன் அழகப்பனையும் நடுங்கவைத்து உண்மையறிவதும், சிறையிலிருந்தவாறே ஒரு பிரபுவின் வீட்டில் கொள்ளையடிப்பதும், தான் செய்யும் களவுகளைக் கண்டுபிடிக்க முடியாவாறு துப்பறிபவர்களைத் திண்டாட வைப்பதும், இலக்ஷ்மணன் நல்லம்மாள்மீது காதல்கொண்டு மயங்குவதும், பிரசித்திபெற்ற துப்பறியுஞ் சிங்கம் ஆனந்தசிங்கின் அரிய முயற்சியும், கடைசியில் அரசூர் இலக்ஷ்மணனே கொள்ளையடிப்பதை விட்டுத் துப்பறியும் தொழிலில் ஈடுபட்டுப் பிரசித்திபெறுவதும் படிக்கப் படிக்க இன்பத்தைப் பயக்கும். சொற்பப் பிரதிகளே அச்சிடப்பட்டிருக்கின்றன. உடனே ஆர்டருக்கு முந்துங்கள். சுமார் 600பக்கங்கள் கொண்டது. இதன்விலை ரூபா 2.

## சந்திரசேகரி. (இரண்டாம் பதிப்பு)

எளிய இனிய நடையில் எழுதப்பட்டது. உலகானுபவமும் இலக்கண அறிவும் விசேஷமாகக் கொண்டது; அன்பின் மகிமை, பொறுமையின் பெருமை, கேடு நினைப்போர் கெடுவர், கடவுளை நம்பினோர் கைவிடப்படார் முதலிய பல அரிய விஷயங்கள் இதில் விளக்கமாகவும் படிப்போர் மனதைக் கவரக்கூடியதாகவும் எழுதப்பட்டிருக்கிறது. அறிவை விருத்தி செய்யக் கூடியதும் இதுவே.

இதன் விலை ரூபா 1—4—0

## இதர ஆக்ட் புஸ்தகங்கள்

| | ரூ. | அ. | | ரூ. | அ. |
|---|---|---|---|---|---|
| இந்தியன் பினல் கோட் சட்டம் | 3 | 0 | பரம்பரை கிராம உத்தியோகஸ்தர்கள் சட்டம் | 1 | 0 |
| கிரிமினல் லா | 3 | 0 | இந்துதேச சாக்ஷி ஆக்ட் | 1 | 0 |
| சிவில் லா | 3 | 0 | தேவஸ்தான சட்டம் | 1 | 0 |
| புது விவகார சிந்தாமணி | 2 | 8 | இன்கம் டாக்ஸ் சட்டம் | 1 | 0 |
| புது பெரிய ஹிந்து லா | 2 | 0 | ஸ்டாம்பு ஆக்ட் | 0 | 12 |
| முகம்மதியன் லா | 2 | 0 | ரெஜிஸ்ட்ரேஷன் ஆக்ட் | 0 | 10 |
| லோகல்போர்ட் ஆக்ட் | 2 | 0 | டிரஸ்டிகள் சட்டம் | 0 | 12 |
| கிராம முன்சிப் சட்டம் | 1 | 8 | கால நிர்ணயச் சட்டம் | 0 | 8 |
| பஞ்சாயத்துச் சட்டம் | 1 | 4 | நில ஆக்கிரமிப்பு என்குரோச்மென்ட் சட்டம் | 0 | 4 |
| எஸ்டேட் லாண்டு ஆக்ட் | 1 | 4 | கிராமச் சுகாதாரம் | 0 | 2 |
| கர்ணம் டெக்ஸ்ட் | 1 | 4 | | | |

ஆனந்தபோதினி ஆபீஸ்,

தபால் பெட்டி நெ. 167, மதராஸ்.

# தத்வசங்க்ரஹ ராமாயணம்

## இரண்டாம் பதிப்பு.

இது சமஸ்கிருதத்திலிருந்து மொழிபெயர்க்கப்பட்ட அருமையான நூல். இதனை ஒரு முறை படிப்பவர்கள் இம்மை மறுமை யென்னும் இருவகை வாழ்விற்குரிய சாதனங்களை யுணர்ந்து மக்களாய்ப் பிறந்த தாம் அநுஷ்டிக்க வேண்டிய ஒழுக்கங்களைக் கைக்கொண்டு பகவானுடைய திருவருட்குரியவராக விளங்குவர் என்பதில் ஐயமில்லை. இந்த கிரந்தம் துஷ்ட நிக்ரஹ சிஷ்டபரிபாலன நிமித்தம் உலகத்தில் ஸத்யவந்தனுகை விளங்கிய தசரதச பூபதிக்கு ஸ்ரீ ராமனுக அவதரித்த ஜகத் பிரபுவின் குணநிசயங்களைப் பற்றிப் பேசுவது.



ஸ்ரீ ராமாவதாரத்தின் உண்மை இதனைப் படிப்பவர்க்கு உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்கும். இதனைப் படித்தால் அநேக ஞான நூற்களைப் படித்த பயனை ஒருங்கே யடைதல் கூடும். ஸ்ரீராம பூஜா விதிகளும் அர்ச்சனைகளும் இதன் கண் விரிக்கப்பட்டுள்ளன. இதுவரையில் வெளியான ராமாயணங்களை விட மும்மடங்கு மேலான தத்வ உபதேசங்கள் இதன் கண் காணலாம்.

உபந்யாசகர்களுக்கு வேண்டிய பல அரிய விஷயங்களுடன் கூடியது. ஸ்ரீ ராம சரிதையை வாசிப்பதே இகபர நன்மை யளிக்கு மென்பர் பெரியோர் இதில் எண்ணிறந்த மிக்க அருமையான விஷயங்கள் அடங்கியிருக்கின்றன.

இதன் விலை ரூபா 4.

## ஸ்ரீமத் கம்பராமாயண வசன சங்கிரகம்

(சப்தகாண்டங்கள் அடங்கியது.)

(நான்காம் பதிப்பு) இதன் விலை ரூபா 2.

ஸ்ரீ இராமர் பட்டாபிஷேகம் ஆப்டோன் படம் சேர்க்கப்பட்டது. மிக்க திருத்தங்களோடு கிளேஸ் கடிதத்தில் அச்சிடப்பட்டுள்ளது.

☞ சொற்ப காப்பிகளே அச்சிடப்பட்டிருக்கின்றன. ஆதலின் புஸ்தகம் வேண்டியவர்கள் முன்னரே எழுதிப் பெற்றுக் கொள்க.

ஸ்ரீ இராமபிரான் சரிதையை விரித்துக் கூறும் இந்த இராமாயணமானது மிக்க புண்ணிய கதை என்பது உலகறிந்த விஷயம். இதனைப் பாராயணஞ் செய்வதாலுண்டாகும் பயன்கள் அளவிடற் கரியனவாம். இதனைப் பக்தி சிரத்தையுடன் படிப்பவர்க்கு உலகத்தில் விரும்பக்கூடிய பொருள்களெல்லாம் கைகூடும்; உயர்ந்த அறிவுண்டாகும்; கீர்த்தி அதிகரிக்கும்; மோக்ஷத்தை அடையும் மார்க்கம் ஏற்படும்; இலக்குமி கடாக்ஷமுண்டாகும்.

---

ஆனந்தபோதினி ஆபீஸ், தபால்பெட்டி நெ. 167, மதராஸ்.

வெளிவந்துவிட்டது! வெளிவந்துவிட்டது!!

100-பக்கங்கள் கொண்ட

## சித்திரபானு வருஷத்திய

(ஷேத்திர ஜீவ நட்சத்திராதி சாந்திர ஸெளரமான) சர்வ முகூர்த்த

# "ஆனந்தபோதினி"

## சுத்த திருக்கணித பஞ்சாங்கம்.

நமது வானசாஸ்திரக் கணிதத்திலும், ஆங்கில வானசாஸ்திரக் கணிதத்திலும் திறமைவாய்ந்த, ஸ்ரீமான் C. G. ராஜன், பி. ஏ. (B. A. Mathematics) அவர்களால் சுத்தமாக இப்பஞ்சாங்கம் கணிக்கப்பட்டது.

பஞ்சாங்கம் 1-க்கு விலை அணா 3.

தனிப் பஞ்சாங்கம் வேண்டுவோர் விலையோடு தபாற்கூலி 1¼-அணா சேர்த்து தபால் பில்லைகளாக அனுப்பவும்.

25-பஞ்சாங்கங்கள் ரு. 4—6—0.

25 பஞ்சாங்கம் வேண்டுவோர் ரு. 4—6—0-ம் மணியார்டர் அனுப்பி சமீபமான ரயில்வே ஸ்டேஷனையும் தெரிவித்தால் ரயில் பார்சலாய் அனுப்பப்படும். ரயில் செலவை செலுத்திப் பெற்றுக் கொள்ளவும்.

**ஆனந்தபோதினி ஆபீஸ்,**
தபால்பெட்டி நெ, 167, மதராஸ்.

## "ஜீவா" எழுதிய நவீனங்கள்

# சீமாட்டி கார்த்தியாயினி

லியோ டால்ஸ்டாயின் உன்னத சித்திரமான அன்னா காரினென்னாவின் தமிழ் உருவம். படிக்கப் படிக்கத் தித்திக்கும் தேனொழுகும் நடையில் எழுதப்பட்டிருக்கிறது. இதன் விலை அணா 12.

# இவ்வுலகைத் திரும்பிப் பாரேன்

செல்வக் குடும்பத்தில் பிறந்து செல்வமாக வளர்ந்து, சீமையில் உயர் தரக் கல்வி கற்று, நவ நாகரீக வலையில் சிக்கிச் சீர்கேடுற்று, வாழ்க்கையில் ஏற்பட்ட பல கஷ்ட நஷ்டங்களால் உலகையே வெறுத்துச் சென்ற புவனசுந்தரி என்னும் பெண்மணியின் சுய சரிதம் யாவர் உள்ளத்தையுங் கவர்ச்சிகொள்ளும். இதன் விலை அணா 14.

---

ஆனந்தபோதினி ஆபீஸ், தபால் பெட்டி நெ. 167, மதராஸ்.

உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

" எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."—திருவள்ளுவர்.



தொகுதி 27 | விஷு ௵ மாசிமீ கஉ | பகுதி 8
1942௵ பிப்ரவரிமீ 12உ

## கடவுள் வணக்கம்.

மண்ணின்மேல் மயங்கிக் கிடப்பேனை
வலியவந்து என்னை ஆண்டு கொண்டானே!
கண்ணிலேன் உடம்பில்அடு நோயால்
கருத்துஅழிந்து உனக்கே பொறையானேன்;
தெண்ணிலா வெறிக்குஞ் சடையானே!
தேவனே! திருவாவடு துறையுள்
அண்ணலே! என்னை அஞ்சல் என்று அருளாய்
யார்எனக்கு உறவு அமரர்கள்ஏறே! (1)

குறைவிலா நிறைவே!குணக் குன்றே!
கூத்தனே! குழைக்காது உடையானே!
உறவிலேன் உனையன்றி மற்று அடியேன்
ஒருபிழை பொறுத்தால் இழிவுண்டோ!
சிறைவண்டுஆர் பொழில்சூழ் திருவாரூர்ச்
செம்பொனே! திருவாவடு துறையுள்
அறவனே!என்னை அஞ்சல்என்று அருளாய்
யார்எனக்கு உறவு அமரர்கள்ஏறே! (2)

கோதிலாஅமுதே! அருள்பெருகு கோலமே!
இமையோர் தொழு கோவே!
பாதிமாது ஒருகூறு உடையானே!
பசுபதீ! பரமா! பரமேட்டீ!
தீதிலா மலையே! திருவருள்சேர்
சேவகா! திருவாவடு துறையுள்
ஆதியேஎன்னை அஞ்சல்என்று அருளாய்!
யார்எனக்கு உறவு அமரர்கள்ஏறே! (3)

# அரும்பொருள் விளக்கம்

(இ-ள்.) குளிர்ச்சி பொருந்திய பிறைச் சந்திரன் பிரகாசிக்கும் சடா[illegible]யே! தேவாதி தேவனே! திருவாவடுதுறை என்னும் திவ்விய க்ஷேத்திரத்தில் எழுந்தருளியிருக்கும் அண்ணலே! மண்ணுலகில் மாயையில் அறிவு மயங்கிக் கிடந்து உழலும் அடியேனை, வலிய வந்து ஆட்கொண்டருளிய பெருமானே! ஞானக்கண்ணில்லாதவனாகிய எனது தேகத்தில் தாக்கும் நோயினால், உணர்வு இழந்து, உனக்குப் பாரமானேன். ஆயினும் அடியேனை அஞ்சேல் என்று திருவருள் புரிவாய். தேவர் தலைவனே! எனக்கு உறவாயுள்ளோர் யார்? (எ-று.)

இறைவன் உயிர்கள்மீது காட்டுங் கருணைத் திறத்தை, "மண்ணின் மேல்...ஆண்டுகொண்டானே" என்ற அடி வாயிலாக விளக்குகிறார். (1)

(இ-ள்.) குறைவொன்றுமில்லாத பரிபூரணமே! நற்குண மலையே! அம்பலவாணனே! குழையணிந்த செவியனே! சிறகுடைய வண்டுகள் மொய்க்கும் பூம்பொழில்கள் சூழ்ந்த திருவாரூர் தேவனான செம்பொன் மேனியனே! திருவாவடுதுறை என்னுந் திவ்விய க்ஷேத்திரத்தில் எழுந்தருளியுள்ள அறவடிவாய ஆண்டவனே! தேவரீரையன்றி வேறு எனக்கு உறவில்லை; அடியேன் செய்த ஒரு குற்றத்தை மன்னித்தருளினால், அதனால் உனக்கு இழிவுண்டாகுமோ! தேவர்கோவே! என்னை அஞ்சேல் என்று ஆட்கொண்டு அருளுவாய். உன்னையன்றி வேறு உற்றார் உறவினர் யார்? (எ-று.)

தன்வயத்தனாதல், தூய உடம்பினனாதல், இயற்கை யுணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை ஆகிய எண்குணங்களும் உடையவன் இறைவன் ஆதலால், "குறைவிலா நிறைவே! குணக்குன்றே" என்று கூறினார். (2)

(இ-ள்.) குற்றமில்லாத தேவாமிர்தமே! திருவருள் கொழிக்கும் திருக்கோலமே! தேவர்களெல்லாந் தொழுந் தியாகராஜனே? வலப்பாகத்தில் பார்வதி தேவியாரை வைத்திருப்பவனே! ஆன்ம நாயகனே! பரம்பொருளே! பரசிவமே! குற்றமில்லா மலையினும் மாண்பானவனே! கருணை பொருந்திய தொண்டனே! திருவாவடுதுறை என்னுந் திவ்விய க்ஷேத்திரத்தில் எழுந்தருளியுள்ள ஆதிபெருஞ் சோதியே! அடியேனை அஞ்சேல் என்று அருள் புரிவாய்; அமரர்கள் தலைவா? எனக்கு உன்னையன்றி உற்றார் வேறு யார்? (எ-று.)

யாவர்க்கும் அம்மையப்பனாய் விளங்கும் இறைவனே உற்ற இடத்தில் உதவும் உறவினன் என உரிமை கொண்டாடி, அஞ்சேல் என்று ஆட்கொண்டருளவேண்டும் என்று இம் மூன்று பாடல்களிலும் வலியுறுத்தியிருக்கிறார். (3)




# அடிமை புத்தி அகலவேண்டும்

நம் நாட்டில் சுதந்திர உணர்ச்சி காரணமாக, மக்களிடையே தேசிய விழிப்பு ஏற்பட்டபோது, அன்னிய அரசாங்கத்தின் சார்பில்லாத தனி தேசிய ஸ்தானங்கள் பல உண்டாயின. அவ்விதம் ஏற்பட்ட தேசிய ஸ்தாபனங்களில், காசி இந்து சர்வகலாசாலை என்னுங் கல்வி ஸ்தாபனமும் முக்கியமானது ஒன்றாகும். தேசிய அபிவிருத்திக்கான துறைகளில் கல்வி புகட்டும் முறையைத் திருத்திய பெருமை இச் சர்வகலாசாலைக்கு உரியதாகும். முதன் முதலாக, தொழிற் கல்வியின் அவசியத்தையுணர்ந்து நடை முறையில், செய்து பிற சர்வகலாசாலைகளுக்கு வழி காட்டியது, இச் சர்வகலாசாலையேயாகும். நம் நாட்டின் கலை, நாகரிகங்கள் புத்துயிர் பெற முயன்று வருவதும், நம் புராதன கலைகளுக்கு முதன்மை தந்திருப்பதும் இச் சர்வகலாசாலையேயாகும். ஆகவே, செல்வர்களும், ஜமீன்தார்களும், சுதேச மன்னர்களும் லக்ஷக்கணக்காக இதற்கு நன்கொடை வழங்கி வருவதும், இந்தியாவின் பல மாகாணங்களிலுமிருந்தும் மாணவர்கள் இக் கலாசாலையில் சேர்ந்து வாசித்து வருவதும் ஆச்சரியமல்ல. நமது தேசிய தலைவர்களில் ஒருவரான பண்டித மதன மோகனமாளவியாவின் பேருழைப்பே இச் சர்வகலாசாலையின் முன்னேற்றத்துக்கும் சகல சிறப்புக்களுக்கும் காரணமாகும் என்றால் மிகையாகாது. இத்தகைய சர்வகலாசாலைக்குத் தான் சென்ற மாத முதல் வாரத்தில் வெள்ளிவிழா கொண்டாடப்பட்டது. இவ் விழாவை முன்னிட்டு, விசேஷ பட்டமளிப்பு விழாவொன்று நடந்தது.

மகாத்மா காந்தி இப் பெரிய விழாவில் ஒரு அரிய சொற்பொழிவு நிகழ்த்தினார். அவரது பிரசங்கம், இதுவரை சர்வகலாசாலை பட்டமளிப்பு விழாக்களில் பிரபலஸ்தர்கள் செய்துவரும் பிரசங்கங்களைப் போல் இல்லாமல், அதாவது சம்பிரதாய முறையில் இல்லாமல், நவீன முறையில் இருந்தது இங்கு குறிப்பிடத்தக்கது. காசி இந்து சர்வகலாசாலை இதுவரை செய்து வந்த

காரியங்களைப் பற்றியே பெரிதும் விமர்சனஞ் செய்யாமல் இனி, அச் சர்வகலாசாலை செய்ய வேண்டிய முக்கிய வேலை என்ன என்பதை மட்டும் வரையறுத்துக் குறிப்பிட்டது மிகவும் போற்றத் தக்க தொன்றாகும். தேசிய எழுச்சியின் எதிரொலியாக ஏற்பட்ட இக் கலாசாலையிலும், தேசிய உணர்ச்சிக்கு முற்றும் மாறான ஒரு பெருங்குறை இருப்பதைச் சுட்டிக் காட்டி, "காசி இந்து சர்வகலாசாலையிலும் ஆங்கிலத்துக்கு அதிகமாக ஆதிக்கங் கொடுத்திருப்பது எனக்கு ஏமாற்றத்தைத் தருகிறது.................எல்லோரும் அறியக்கூடிய சாதாரண ஹிந்துஸ்தானியையே உபயோகிக்க வேண்டும். இந்திய சர்வ கலாசாலைகளில் பல இப்போது, 'பிளாட்டிங்' காகிதத்தைப் போல, மேனாட்டு மனப்பான்மையை ஆகர்ஷிக்கக் கூடியனவாக இருக்கின்றன. ஆனால், (லண்டன்) ஆக்ஸ்போர்டு சர்வ கலாசாலையும், கேம்பிரிட்ஜ் சர்வ கலாசாலையும், எங்கு போனாலும், அவர்களின் சம்பிரதாயத்தை விடுவதில்லை. இந்திய சர்வ கலாசாலைகள் அவ்விதஞ் செய்வதில்லை. காசி சர்வ கலாசாலையில் உள்ளவர்கள் அலிகார் சர்வகலாசாலையி லுள்ளவர்களுடன் தொடர்பு வைத்துக்கொண் டிருக்கிறார்களா? இந்து சர்வ கலாசாலை மாணவர்கள் தங்கள் மாகாணப் பற்றையும், தங்கள் கலைஞான உணர்ச்சியையும் மறந்து இந்து மதத்தின் பூர்விகக் கொள்கைப்படி சமரஸ நோக்குடன் கலந்து, உழைக்கிறார்களா? இதற்கு ஆமாம்; என்று அவர்கள் பதிலளித்தால், இந்தச் சர்வ கலாசாலை அவர்களைப் பற்றிப் பெருமைப்பட வேண்டியது தான். உலகத்தில் சமாதானச் செய்தியையும் நல்லெண்ணப் பிரசாரத்தையும் வளர்க்கும் வேலையை அவர்களிடம் தாராளமாக அப்போது ஒப்படைக்கலாம்" என்று கூறி, இந்திய சர்வ கலாசாலைகளின் விபரீதப் போக்கைக் கண்டித்திருக்கிறார்.

"நமது அபிப்பிராயத்தை நாம் ஆங்கில மொழி மூலமே வெளியிடுகிறோம். இந்தச் சந்தர்ப்பத்தில் ஹிந்தியோ, ஹிந்துஸ்தானியோ, உருதுவோ, சமஸ்கிருதமோ உபயோகிக்கப்பட்டிருந்தால், நலமாக இருந்திருக்கும். ஆங்கிலேயரின் மொழியை நாம் அடிமைப் புத்தியுடன் இவ்விதம் உபயோகித்து வருகையில், இந்தியா விஷயத்தில் அவர்கள் சரியாக நடக்கவில்லை யெனக் கூறுவது எவ்விதம் பொருந்தும்? நாம் ஆங்கிலத்தில் தவறில்லாமல் அழகாகப் பேசிவிடுவதாக ஆங்கிலேயர்கள் சொல்லி விட்டால் அளவற்ற சந்தோஷம் நமக்கு ஏற்பட்டு விடுகிறது. நமது தாழ்வுக்கு இதைவிட வேறு அத்தாட்சி வேண்டுமா! மேனாட்டில் சிறந்த அம்சங்கள் என்னென்ன இருக்கின்றனவோ அவற்றை நாம் பின்பற்ற வேண்டும். ஜப்பானைப் பாருங்கள்! மேனாட்டினரை அறைகூவி அழைக்கும் ஆற்றல்

பெற்றிருக்கிறது. மேனாட்டுப் பழக்க வழக்கங்களை அடிமைப் புத்தியுடன் அப்படியே அநுஷ்டித்து அது இவ்வித ஆற்றலைப் பெறவில்லை. அவர்கள் தங்கள் தாய்மொழி மூலமே மேனாட்டி லுள்ள அரிய அம்சங்களை அறிந்துகொண்டனர். ஆங்கிலத்தை கற்றுக்கொள்ளச் செலவிடும் அரிய காலத்தை வேறு பயன்தரத் தக்க வழிகளில் செலவிடலாம்" என்று இன்னமும் இந்தியர்களி டையே அன்னிய மொழி மோகம் இருந்துவருவதை வெகு நன் ருக மகாத்மா எடுத்துக் காட்டியிருப்பது குறிப்பிடத் தக்கது.

எனவே, மகாத்மா எடுத்துக் காட்டிய இக்குறையை பண் டித மாளவியாவும் ஒப்புக்கொண்டார். "ஹிந்தியிலேயே சாஸ் திர பாட புத்தகங்கள் முதலியன தயாராகிவிட்டால் ஆங்கில மொழிமூலம் கல்வி கற்பிக்கும் வழக்கம் மறைந்துவிடும்" என்று அவர் மகாத்மாவுக்கு உறுதி கூறினர். மகாத்மா காந்தியின் மேற்குறித்த உபதேசம், காசி இந்து சர்வ கலாசாலை மாண வர்களுக்கும், ஆசிரியர்களுக்கும் மட்டுமல்ல; இந்தியாவில் உள்ள எல்லா சர்வ கலாசாலை ஆசிரிய மாணவர்களுக்கும் உரியதாகும் என்றே நாம் அபிப்பிராயப் படுகிறோம்.

அரசாங்க சார்பில் நடைபெறும் சர்வ கலாசாலைகளில் ஆங் கில மொழிக்கு முக்கியத்துவம் அளிக்கப்படுவது இயற்கை. தேச மக்கள் கருத்தை மதித்து சர்க்கார் மனோபாவம் மாறினலல் லாது, அவைகளின் போதன முறையில் மாறுதல் ஏற்படுவதற் கில்லை. ஆனல், தேசிய முறையில் ஏற்படுத்தப்பட்ட தேசிய சர்வ கலாசாலைகளிலும், தனிப்பட்டவர்கள் ஏற்படுத்தி நடத்தும் சர்வ கலாசாலைகளிலும், தாய்மொழிக்கு முதன்மை யளித்து கல்வி போதனை நடைபெறுவதுதான் நியாயம். இதைத்தான், மகாத்மா காந்தி வற்புறுத்தி யிருக்கிறார். மகாத்மாவின் இவ் வுபதேசத்தை நமது அண்ணுமலை சர்வ கலாசாலை நிர்வாகிகள் முக்கியமாகக் கவனிக்கவேண்டும். தமிழ்நாட்டில் இருக்கும் இக் கலாசாலை தமிழ் மொழி கலை வளர்ச்சிகளுக்கெனவே ஏற்பட் டது என்பதை இச் சர்வ கலாசாலையின் ஆதி சரித்திரத்தை நோக்குவார் அறிவர். ஆனல், இச் சர்வ கலாசாலை நிர்வாகத்தை ஏற்று நடத்திவருவோர், இந் நோக்கத்தை அலட்சியஞ் செய்து, தாய் மொழியைப் புறக்கணித்து, சர்க்கார் சர்வகலாசாலைகளைப் போன்றே ஆங்கில மொழிக்கு முதன்மையளித்து மாணவர்களுக் குக் கல்வி புகட்டி வருகிறார்கள். "இந்திய சர்வகலாசாலைகளில் பல இப்போது 'பிளாட்டிங்' காகிதத்தைப் போல மேனாட்டு மனப்பான்மையை ஆகர்ஷிக்கக் கூடியனவாக இருக்கின்றன" என மகாத்மா வருணித்தது, நம் அண்ணுமலை சர்வகலாசாலைக்கு முற்றும் பொருத்தமாகும். எனவே, மகாத்மாவின் மணிமொழி யைக் கவனித்த பின்பேனும், அண்ணுமலை சர்வகலாசாலை நிர்

## அவள் பாடிய பாட்டு (ஜி. அழகிரிசாமி)

பல்குன்ற நாட்டிளம்பெண் வயலிடையின்
தனிமையை நீர்பாரீர்! அன்னாள்
நெல்லறுத்துத் தானே தான் பாடுவதைப்
பருகிட நீர் நிற்பீர், அன்றேல்
செல்லுவதே உயர்வுமக்கு; தனியாகத்
தானியத்தை அறுத்துச் சேர்த்துச
மெல்லொலியால் பாடுகிற சோகவரி
கணவாயை மேவக் காணீர்! 1.

அரபிப் பாலைவனத்துச் சோலைநிழல்
அமர்ந்திருக்கும் அலைந்த பேர்க்கு
வரவேற்கும் பாட்டிதுபோல் இராப்பாடி
பாடியதோ? வசந்த காலக்
கருங்குயிலி னிடமிருந்தும் கேட்டதிலை
ஹெப்பிரிதீஸ் கணக்கில் தீவில்
குரலிது போல், இதுகாறும், கடலமைதி
குலைத்து மனம்குளிர அம்மா! 2.

எந்தனுக்கு யாரேனும் அவள்பாட்டு
யாதென்று இயம்ப மாட்டீர்?
முந்தையநாள் சோகத்தை, கொடும்போரைக்
கூறியதோ முன்மேல் பாட்டு?
இந்நாள் செய்தியையோ? நிகழ்ந்துசென்ற
அன்றேல் பின்நிகழ நிற்கும்
உந்துயர், நஷ்டம்நோ எனுமிவற்றை
இன்னிசையோடுரைத்திட் டாளோ? 3.

பெண்ணவளின் முடிவற்ற பெரும்பாட்டு
யாதெனினும், பித்தன் நானும்
கண்ணுற்றேன் அரிவாளின் வேலையிடைக்
குனிந்தே அக் கயற்கண் பாட;
எண்ணத்தைச் செலுத்தி ஒரு சந்தடியும்
இல்லாது இருந்தே கேட்டேன்;
பண்சுமந்த என்மனத்தோ டருகிருந்த
குன்றேறப் பாட்டைக் காணேன். 4.

(ஆங்கிலக் கவி உவர்ட்ஸ்வொர்த் (Wordsworth) எழுதிய Solitary Reaper என்ற பாட்டைத் தழுவியது.)

---

வாகிகள், கல்வி புகட்டும் முறையில் அடிமை புத்தியை விட்டொழித்து, மாணவர்களுக்குத் தாய்மொழி மூலம் சகல கல்வி, விஷயங்களையும் புகட்டி, நம் பண்டைய கலை, நாகரிகங்களைப் புத்துயிர் பெறச் செய்வார்களா!

# சில அனுபவ விநோதங்கள்

[எரும்பூர் — குருஸாமி ஐயர்.]

## (1) செலவும் சிக்கனமும்

வரவும் செலவும் ஒன்றையொன்று தழுவியதாக இருக்கவேண்டும். செலவுக்குத் தக்க வரவைத் தேடவேண்டும். ஆனால், வரவு இருந்தால் செலவுதானே தேடி வந்துவிடும். எந்த மனிதனும் சம்பாதிப்பதும் செலவு செய்வதுமாகத் தானிருக்கிறான். எனவே, சம்பாதிப்பதும், செலவு செய்வதும், வாழ்க்கையில் முக்கிய வேலையா யிருக்கிறதெனலாம். 'திரைகடலோடியும் திரவியம் தேடு', என்று சொல்லப்பட் டிருக்கிறது. அதன்படி அவரவரும் தன் தன் சக்திக் குகந்தவாறு சம்பாதிக்கிறார்கள். ஆனால் செலவு மட்டும் சக்திக்கு மீறிவிடுகிறது. இவ்வாறு அளவு கடந்து செலவு செய்யக் கூடாதென்பதற்குத்தான் 'சிக்கனம்' என்று பெயர். முதலில் வரவு, பின்னர் அதில் செலவு, அந்த செலவையும் சிக்கனமாகச் செய்தல், இவைதான் ஒவ்வொருவரும் முக்கியமாக கவனிக்க வேண்டியதாகும்.

வரவைவிட செலவு அதிகமானால், கடவுள் நம்மை பணக்காரனாக்க வேண்டுமென்று வேண்டுகிறோம், அல்லது, கடவுள் கஷ்டப்பட வைப்பதற்கு திட்டுகிறோம், அல்லது, சிநேகிதர்களிடமோ, பணக்காரர்களிடமோ சென்று கடன் கேட்கிறோம், கெஞ்சுகிறோம், முதலில் யாராவது கடன் கொடுத்து விடுகிறார்கள். ஆதலால் இதே உபாயம் (தைரியம்) ஒவ்வொரு சமயமும் கையாளப்பட வேண்டியதாகிறதே யொழிய வாங்கின கடனைத் திருப்பிக் கொடுக்க முடிவதில்லை. இப்படியே சில நாட்கள் செல்லுகின்றன. இதற்குப் பிறகு கடன் கொடுப்பார்கூட எவரும் கிடைப்பதில்லை. 'கடன்பட்டார் நெஞ்சம்போல் கலங்கினான் லங்கை வேந்தன்' என்றபடி, எப்பேர்ப்பட்ட திடமனதானாலும் கடன சுமையால் வாதிக்கப்பட்டு, உடல்மெலிந்து, மனம் தளர்ந்து, கஷ்டப்படுகிறோம். இதைவிட்டு, எப்படி முன்னுக்கு வருவதென்று யோசித்து, (Family budget) குடும்ப வரவு செலவை திருத்திக் கொள்வதில்லை. மேலும், மேலும், அதே செலவுகளையே தொடர்ந்தும், அதிகமாகவும் செய்கிறோம். "ஆன முதலில் அதிகம் செலவானால்............", என்ற செய்யுளை மனதில் வைத்து நடத்தல்வேண்டும்.

## (2) தனயனுக்கு தந்தை தாத்தா உறவா ?

பால்யத்தில் விவாஹமாகிறது. பால்யத்திலேயே குழந்தைப் பேறும் உண்டாகி விடுகிறது. கடைசியில் கடவுள் இதற்கு முற்றுப்புள்ளி வைக்க மாட்டாரா? என்று வரம் கேட்கும் நிலைமைக்கும், ஆளாகிவிடுகிறார்கள். பால்ய விவாஹம், சமூகத்தின் சட்டம், சம்பிரதாயம், எனப்படுகிறது, கடவுளை முற்றுப்புள்ளி வரம் கேட்பது, குழந்தைகளை வைத்து சமாளிக்க முடியாததால் ஏற்படும் கஷ்டங்களின் தன்மையை விளக்குகிறது அல்லவா? பின்னர், சம்பிரதாயத்திற்கு இடம் கொடுப்பதைவிட்டு, சௌகரியத்திற்கு ஏன் இடம் கொடுக்கலாகாது? அதுதான் குருட்டு நம்பிக்கை (குருட்டுப் பாதை)யை விட்டுவிட மனமில்லாமை, என்பது.

வீட்டிலுள்ள கிழங்களுக்கு ஆணும், பெண்ணும் பிறந்ததென்றால் உடனே அவைகளுக்கு கலியாணமாக வேண்டுமென்று பிரார்த்தனை. கலியாணமாகி விட்டால் குழந்தை பிறக்க வேண்டுமென்று பிரார்த்தனை.

குழந்தைகளும் அதிகமாகி, தம்பதிகளும் உடல்நலங்கெட்டு கஷ்டப்பட்டால், "ஐயோ, இந்தக் குழந்தைகள் இல்லையென்று யார் தவம் செய்தார்கள்?", என்ற முணுமுணுப்பு. இவ்வாறு பால்ய விவாஹத்தினால் பிரத்தியக்ஷ பலன்களை அனுபவித்தாலும், தங்கள் பல்லவியாகிய, "கன்னி கழியவேண்டும். குஞ்சு பிறக்கவேண்டும். இந்த இரண்டையும் பார்த்துவிட்டுச் சாகவேண்டும்", என்பதை மட்டும் மறந்துவிட மாட்டார்கள்,

ஒருவன் தன் முப்பது வயதிற்குள்ளேயே மருமகளை சம்பாதித்துவிடுகிறான். அவனைப்போலவே அவன் பிள்ளையும் எல்லா விஷயங்களிலும் முந்திக்கொள்கிறான். இதற்குள் தலைவனுக்கு ஒரு டஜன் குழந்தைகளாகிவிடும். மற்றும், பெண்ணிற்கும், அடுத்தடுத்து மற்றவர்களுக்கும் விவாஹம் செய்யவேண்டியிருக்கிறது. இப்படியாக சுபா சுபங்கள் ஒரு குடும்பத்தில் நடந்துகொண்டிருக்க இவைகளை ஒரு இளம் பிராயமுள்ள தலைவன் தலை நிமிர்ந்து சமாளிக்கவேண்டியிருக்கிறது. மேலும், ஒரே சமயத்தில் சற்று முன் பின்னாக, மனைவி, மகள், மருமகள் ஆக மூவரும் பிரஸவத்திற்கு தயாரா யிருப்பார்கள். இதனிடையே மீதமுள்ள குழந்தைகளுக்கு விவாஹப்பேச்சு நடந்துகொண்டிருக்கும். இத்துடன் குடும்பத்தலைவனுக்கு ஷஷ்டி யப்தபூர்த்தி வந்து சேரும். சில சமயங்களில் முதல் மனைவி இறந்து மறு விவாஹம் செய்துகொள்ள வேண்டி வந்தால் குழந்தைப் பேறுக்கு குடும்பத் தலைவன் அசல் கிழமாகும் வரை முற்றுப் புள்ளியே இரா தெனலாம். இத்தியாதி கஷ்டங்களால் குடும்பம் கஷ்டப்படும்போது, குழந்தைகளின் க்ஷேமத்தை குடும்பத் தலைவன் கருதுவது துர்லபம்தான். பெண் குழந்தைகளானால் மூன்றும் தாரமாகவும், நாலாந் தாரமாகவும், கொடுக்க இசைந்து பணம் பெறுவதில்தான் நாட்டம் கொள்ளும். ஆண் குழந்தைகளானால் காபி ஹோட்டல்களிலும், மளிகைக் கடைகளிலுமாக வேலை செய்ய விடுவதைத் தவிர வேறு வழியில்லை.

மூன்றுந்தாரமாகவும், நாலாந்தாரமாகவும் கொடுத்த இடங்களில் மாப்பிள்ளைகளுக்கு ஷஷ்டி யப்த பூர்த்தி, தனக்கு வரு முன்னரே வருவதும் உண்டு. இப்படியாக ஒரு வீட்டில் பல தம்பதிகள். பல தம்பதிகளும் தலைக்கொரு மூலையை ஆக்ரமித்துக்கொண்டு உறவாடுவதும், குழந்தைகள் ஒன்றுடன் ஒன்று சண்டையிட்டுக்கொண்டு கூச்சலிடுவதும் ஒரு அழகுதான். ஆனால், ஒரேசமயத்தில், வீட்டிலுள்ள பெரியோர் முதல் சிறியோர் வரை முன் பின்னாக ஒருவர் வீதமும் குறைவுபடாத வகையில் கருப்பமுற்றிருப்பதுதான் வெறுக்கத்தக்க விஷயம். குடும்பத்தலைவன், தனது குழந்தைகளை கிரஹஸ்தாஸ்ரமத்திற்கு கொண்டு வரும் போதே அவன் தன் சிற்றின்ப சுகங்களை மறந்துவிட வழக்கப் படுத்திக்கொண்டிருக்கவேண்டும். இந்தக் கஷ்டங்களுக்கு பால்ய விவாஹமே அஸ்திவாரம், அல்லவா?

மற்றொரு அசம்பாவிதம் குடும்பத்தலைவனை அவன் பேரன் 'தாத்தா' என்கிறான். அதைக் கண்டு, அவன் முதல் தாரக் கடைசிக் குழந்தையோ, அல்லது இரண்டாந்தாரக் குழந்தையோ அதே வயதுடையதால், தகப்பனை 'தாத்தா' என்கிறது. வாஸ்தவத்தில் அவன் தாத்தாதான்; (பேரன் பிறந்துவிட்டதால்), ஆனால் அவன் தன்னை தாத்தாவாக நினைத்து தன் செய்கைக்கு முற்றுப்புள்ளி இட்டால்தானே, அவ்வாறு தன்னை கூப்பிடும் சப்தம் கேட்டாவது வெட்கப்பட்டு தங்களைத் திருத்திக் கொள்பவர்களே புத்திசாலிக ளாவார்களென வேண்டும்.

# மாணிக்கவாசக சுவாமிகள்

(நாரண—துரைக்கண்ணன்.)

(சென்ற இதழ் தொடர்ச்சி.)

அர:—அந்தோ! பாவி நான் கெட்டேன். பெரியார் பெருமையை யறியாத பிழை செய்தேனே! அவரிடம் நான் மன்னிப்பு கேட்டுக்கொள்ள வேண்டும். அம்மகான் எங்கு சென்றார்?

குடி மக்: ஒரு:—அவர் கோயிலில் கடவுளைத் தொழுதுகொண் டிருக்கிறார்.

சோக்கநாதர் கோயில்.

மாணி:—

"பாருருவாய பிறப்பற வேண்டும்
பத்திமை யும்பெற வேண்டும்
சீருருவாய சிவபெரு மானே
செங்கமல மலர் போல்
ஆருருவாய என்னாரமுதே உன்
அடியவர் தொகை நடுவே
ஒருருவாய நின்திருவருள் காட்டி
என்னையும் உய்யக்கொண் டருளே."

அர:—(வணங்கி) சுவாமி! நான் தேவரீருடைய பெருமை யறியாது செய்த தீங்குகளையெல்லாம் பொறுத்து அருள்க. முன்போல் உமது தேசத்தை யாண்டு, என்னையும் குடிமக்களையுங் காத்து அருள்க.

மாணி:—(புன்முறுவல் தோன்ற) அரசே! நீர் தேவேந்திரன்போல் இத் தேசத்தை யாண்டு இன்புற்று வாழ்க. எம்பெருமான் என்னைச் சிதம்பரத்துக்குப் போகும்படிப் பணித்திருக்கிறார். ஆதலால், எனக்குப் போக விடை கொடும்.

அர:—பெரியீர்! தங்கள் விருப்பத்துக்கு இனி நான் குறுக்கே நிற்க மாட்டேன். போய் வாருங்கள்.

[போகிறார்.]

காட்சி 19.

சிதம்பரம் திருக்கோயில்.

சிவனடியார்கள்:—யாரையா நீர்? கோயில் மண்டபத்தில் குடி கொண்டிருப்பவர்?

புத்தகுரு:—நான் ஈழநாட்டினன். பௌத்தமதத் தலைவன்.

சிவனடி:—பிற மதத்தவர்கள் இங்கிருக்கக் கூடாது. இவ்வூர் எல்லையைக் கடந்து போய்விட வேண்டும்.

புத்தகுரு:—பிடக நூற் றலைவனாகிய புத்தனினும் பெரிய கடவுள் வேறில்லை என்பதை நிலைநாட்ட நான் என் சிஷ்யர்களுடன் வந்திருக்

கிறேன். சோழ மன்னனிடம் இவ்வுண்மையை உறுதிப்படுத்தாது, இவ்விடத்தை விட்டுப் போகமாட்டேன். என்னிடம் வாதஞ் செய்து சிவ மதமே சிறந்ததென நிலைநாட்டுவார் முன் வரலாம்.

சிவனடி:—இவன் பெரிய சண்டியா யிருக்கிறான். நம்மால் இவனுடன் வாதஞ் செய்ய முடியாது. அரசனையும் பெரியோர்களையும் இங்கு வரவழைக்க வேண்டும்.

(போகிறார்கள்.)

[தில்லை மூவாயிரவர் கனவில் இறைவன் தோன்றிப் புத்தனை வெல்ல வழி கூறுகிறார்.]

சிவ:—இவ்வூர் எல்லையில் நம் அன்பன் திருவாதவூரன் வந்து தங்கி யிருக்கிறான். அவனிடஞ் சென்று விஷயத்தைக் கூறுவீர்களானால் உடனே வந்து புத்த தலைவனோடு வாதபுரிந்து சைவநெறியின் சிறப்பை நிலைநாட்டுவான்.

மூவாயிரவர்:—நடராஜா! அடியேங்களிடம் நீ கொண்டுள்ள கருணை தான் என்னே!

## திருவாதவூரர் வீடு.

மாணி:—

இந்திரிய வயமயங்கி இறப்பதற்கே காரணமாய்
அந்தரமே திரிந்துபோய் அருநரகில் வீழ்வேற்குச்
சிந்தைதனைத் தெளிவித்துச் சிவமாக்கி யெனையாண்ட
அந்தமிலா ஆனந்தம் அணிகொள்தில்லை கண்டேனே.

மூவாயிர:—சுவாமி நமஸ்காரம், ஈழநாட்டுப் புத்தனொருவன் இங்கு வந்து நம் சைவ சமயத்தைப் பற்றிக் கேவலமாகப் பேசித் திரிகிறான். அவன் கர்வத்தை யடக்கிச் சிவவொளியைப் பரப்பவல்லவர் தேவரீர் தான் என்று இறைவன் கனவில் கூறியருளினார். ஆதலால், தாங்கள் புத்தனுடன் வாதம் புரிய முன் வரவேண்டும்.

மாணி:—கடவுள் சித்தம் அதுவாயின், அவ்வாறே செல்வோம்.

## கோயில் மண்டபம்.

[சோழ மன்னன், ஈழ மன்னன் இருவரும் இரு பக்க மிருக்க, தில்லை மூவாயிரவர் சூழ்ந்திருக்க மாணிக்கவாசகரும் புத்தமதத் தலைவனும் வாதம் புரிகின்றனர்.]

சோழ மன்னன்:—(மாணிக்க வாசகரை நோக்கி) சுவாமி; வாதத்தைத் தொடங்கலாம்.

மாணி:—அப்படியே ஐய, (புத்தனை நோக்கி) நீர் இவ்விடம் வந்த காரணம் யாது?

புத்:—என் சமய உண்மையை நிலை நாட்டிப் பொன்னம்பலத்தைப் புத்தர் பள்ளியாக்கவே வந்தேன்.

மாணி:—வெகு சந்தோஷம். உமது கடவுளின் தன்மை என்ன? அவன் அருளைப் பெறும் விதம் எப்படி?

புத்:—எம் இறைவன் அறங்களை விரித்துரைக்கும் பிடக நூலினை இயம்பி யிருக்கிறான். அவன் எவ்வுயிருக்கும் அன்புடையனாய்ப் பல பிறப்புக்களை யெடுத்து, உயிர்களுக்கு நன்மை புரிகிறான். கொல்லாமை முதலிய குற்றங்களை ஒழித்து அரசமர நீழலில் உருவத் திருமேனி கொண்டு எழுந்தருளி யிருக்கிறான்.

மாணி:—இவ்விதப் பரத்துவம் வாய்ந்த புத்த பகவானின் அருளைப் பெறும் விதம் எப்படி?

புத்:—சொல்கிறேன்; கேளும். கருவிலே சேரும் உருவம், வேதனை, குறிப்பு, பாவனை, விஞ்ஞானம் ஆகிய ஐந்து கந்தங்களுங்கூடி உடம்பு தோன்றுகிறது. அதன்கண் எழும் பல திறப்பட்ட அறிவுகளே உயிராகும். எல்லாப் பொருள்களும் கணந்தோறும் தோன்றியழியும். கந்தங்களின் கூட்டம் அழிவுறுவதே பிறவித் துன்பம் அறுதலாம். ஐங்கந்தமும் முற்றும் அற்றுப் போதலே முத்தி.

மாணி:—ஐயா, உம் தலைவன் பிடக நூல் உரைத்தான் என்றனை. அறிவு கணந்தோறும் அழியுமாயின், சொல்லையும் பொருளையும் நாடி நூல் செய்வதன் முன்னமே அவற்றை அறிந்த அறிவு பங்கமுறுமானால், நூலினை எவ்வாறு இயம்ப முடியும்? ஆதலால் அறநூல் கூறப்பட்டதென்பது பொருந்தாது. உன் கடவுள் பிறந்தனன் என்றால், பிறவியானது மயக்கத்திற்குக் காரணமாதலால், உன் கடவுள் மயக்கத்தி லாழ்ந்தவனாவான். பிறர் மயக்கத்தைத் தீர்க்கவந்தவன் தானே மயக்குற்றால் பிறர் மயக்கத்தை அவன் எவ்வாறு தீர்க்க முடியும்? முடியாததால் உன் கடவுள் கொள்கை பிழைபட்டதே. உன் கடவுள் 'கொல்வது கருதான்' என்றாய். புலி, நரி முதலிய விலங்குகளாகப் பிறந்த காலை, பசி மிகுந்தபோது ஊன் தின்னா திருத்தல் இயல்பாமோ? பஞ்சகந்தக் கூட்டம் அழிவதானால், உன் கடவுளுக்கு உருவம் ஏது? உன் தலைவனாய புத்தன் பிறக்கும்போது தாயின் வயிற்றைப் பீறிக்கொண்டு வெளிவந்தமையால் தன் தாய்க்கே தீங்கிழைத்தவனாவான். பூத நான்கின் கலப்பாலே அறிவு உண்டாவதென்றால், அவ்வறிவு அப் பூதப் பிண்டத்தின் குணமாக வேண்டும். ஒருவன் தூங்குங்காலை அவன் மேலேறிச் செல்லும் பாம்பினை அறியமாட்டான். பூதச் சேர்க்கையாகிய உடம்பு பாம்பின் செலவை அறிய முடியுமோ? ஆதலால் அறிவு பூதக் கூட்டத்தில் எழுவ தென்று கொள்ளுதல் தவறு. ஐங்கந்தமாகிய உடம்பு அழியாது கிடப்ப, உயிர் நீங்கிய கால் அஃது அறிவொழிந்து போதலும் இதனை வற்புறுத்தும். நாற்பூதமே எப் பொருளுமாய் விளங்குகின்றது என்று கூறும் நீ அவை கலப்பதற்குரிய இடத்தை யாதென்று கூறுவாய். இடம், திசை என்பனவற்றை இல் பொருள் என்பையாயின், நீயே வடதிசை நோக்கிப் புத்தனை வணங்குதல் எப்படி? மரம் முதலிய ஓரறிவு உயிர்களை உயிரில் பொருள் என்கிறாய்? அவை அங்ஙனமாயின், உணவுண்ட காலை வளர்தலும் அஃதில்லாத காலை தேய்தலும் அவற்றிற்கு எவ்வாறு இயலும்? தீவினைப் பயனை அனுபவிக்க மக்

கள் அவையாய்ப் பிறத்தல் யாங்ஙனம்? கொல்லுவது குற்றம், பிறர் கொன்றதைத் தின்னுதல் குற்றமில்லை என்பது உன் கொள்கை. ஓர் உயிரைக் கொன்று அதன் ஊனை உனக்குக் கொடுத்தவன் கொலைப் பாவம் எய்துவது உன் மனதிற் கொத்தது தானோ? ஐவகைக் கந்தம் கெடவே உயிர் கெடும். உயிர் கெடுமாயின் முத்தி பெற்றது யாது?

புத்தகுரு:—(கோபங்கொண்டு) உம்முடைய கடவுளின் இயல்பு யாது? முத்தி என்பதன் இலக்கணம் என்ன?

மாணி:—எங்கள் கடவுள் உலகம் உய்தற் பொருட்டு ஆல நீழலி லிருந்து நால்வர்க்கு அறம் உரைத்தார். உலகத்தை ஐந்தொழிற்படுத்தும் இறைவன் திருவருளினை உலகர் அறிந்து கும்பிடுதற் பொருட்டுப் பொன்னம்பலத்தில் திருநடனம் புரிகின்றார். அவர் உமையொரு பாகர்; நீறணி மேனியர். அவர் பெருமை சொல்ல வொண்ணாது.

புத்த:—ஆல நீழலில் உமது கடவுள் செப மாலையோடு இருக்கிறாரெனின், எக் கடவுளை நினைந்து அவர் தியானத்தி லிருக்கின்றார்? தில்லையில் அவர் நடிப்பாரெனின், நல்லறிவுடையோர் யாராவது தாமாக ஆடிக் கொண்டிருப்பாரா? திருநீற்றினைச் செவ்வொளி தங்கும் தமது திருமேனியில் எதன் பொருட்டு அணிந்தார்? புனிதமென்று தரித்தாரா? உம்முடைய இறைவர் மங்கை யொரு பங்கரெனில், உடம்பிற் பாதி பெண் வடிவுடையார் யாராவதுண்டா? அவர் பெண்ணோ டிருப்பின் அவரை வணங்கும் நீர் துறவியாவானேன்?

மாணி:—எங்கள் இறைவன் செபமாலை வைத்திருத்தல் தம் பொருட்டன்று. உலகத்தார்க்குத் தவங் கற்பித்தற் பொருட்டு. உயிர்களுக்கு உயிராய் எல்லாவற்றையும் ஆட்டுவிக்கும் இயல்பைக் காட்டுவதற்காக மன்றினுள் நடிக்கிறாரே யொழிய, தம் பொருட்டு நடிக்கவில்லை. நீற்றினை இறைவன் அணிந்தது உலகினரது இடரையொழித்தற் பொருட்டு. முடிவு காலத்தில் எல்லாவற்றையும் ஒடுக்கித் தானே தனி நிற்பதென்பதை அது குறிக்கும். போகத்தை உலகத்தார்க்குக் கொடுத்தற் பொருட்டு மாதொரு பாகராயும் முத்தி கொடுத்தற் பொருட்டு யோகியாயும் இறைவர் இருப்பதை நீ அறியாய்.

புத்த:—போகியா யிருக்கும் ஒருவன் யோகியா யிருப்பது எப்படி? உலக மக்களுக்காக போகியாயும் யோகியாயும் இருக்கிறா னென்றால், அவன் வேஷதாரியே யொழிய கடவுளாக இருக்க முடியாது.

மாணி:—சிவ சிவ சிவா! எவ்வளவு கொடிய மொழிகளை இவன் புகல்கின்றனன்? ஒழுங்காக வாது செய்யத் தெரியாமல் பொருந்தாத வழக்குகளையும் இழிவான சொற்களையும் கூறும் இவன் நாவினின்றும், கலைமகளே! நீ நீங்கி விடுவாயாக. சிவபெருமான் ஆணையாகக் கூறுகிறேன்.

புத்த:—(பேச வாயெடுத்தவன்) பே பே பே! (என்று ஊமையாய் விடுகின்றனன்.)

ஈழ மன்னன்:—(வணங்கி) சுவாமி, பேசுந் தன்மையுடைய புத்த குருவை ஊமையாக்கினீர்? பிறவியிலேயே ஊமையா யிருக்கும் என் புதல்வியைப் பேசும்படி செய்தருள வேண்டும். நான் உமக்கு அடிமை.

மாணி:—சூழ்தாய்! புத்தர் கேட்ட வினாக்களுக்கு விடை பகர்க.

"பூசுவதும் வெண்ணீறு பூண்பதுவும் பொங்கரவம்
பேசுவதுந் திருவாயான் மறைபோலுங் காணேடீ:—"

ஊமைப் பெண்:—

பூசுவதும் பேசுவதும் பூண்பதுவுங் கொண்டென்னை
ஈசனவன் எவ்வுயிர்க்கும் இயல்பானான் சாழலோ.

மாணி:—

என்னப்பன் எம்பிரான் எல்லார்க்குந் தானீசன்
துன்னம்பெய் கோவணமாக் கொள்ளுமது வென்னேடீ.

ஊமை:—

மன்னுகலை துன்னுபொருள் மறைநான்கே வான்சரடாத்
தன்னையே கோவணமாச் சாத்தினன்காண் சாழலோ.

மாணி:—

கோயில் சுடுகாடு கொல்புலித்தோல் நல்லாடை
தாயுமிலி தந்தையிலி தான்தனியன் காணேடீ.

ஊமை:—

தாயுமிலி தந்தையிலி தான்தனியன் ஆயிடினும்
காயி லுலகனைத்துங் கற்பொடிகாண் சாழலோ.

மாணி:—

தென்பால் உகந்தாடுந் தில்லைச் சிற்றம்பலவன்
பெண்பால் உகந்தான் பெரும்பித்தன் காணேடீ.

ஊமை:—

பெண்பா லுகந்திலனேற் பேதாய் இருநிலத்தோர்
விண்பாலி யோகெய்தி வீடுவர்காண் சாழலோ.

மாணி:—

தேன்புக்க தண்பணைசூழ் தில்லைச்சிற் றம்பலவன்
தான்புக்கு நட்டம் பயிலுமது என்னேடீ.

ஊமை:—

தான்புக்கு நட்டம் பயின்றிலனேல் தரணியெல்லாம்
ஊன்புக்க வேற்காளிக் கூட்டாங்காண் சாழலோ.

மாணி:—

அம்பரமாம் புள்ளித்தோல் ஆலாலம் ஆரமுதம்
எம்பெருமான் உண்டசதுர் எனக்கறிய இயம்பேடீ.

ஊமை:—

எம்பெருமான் ஏதுடுத்து அங்கேதமுது செய்திடினும்
தம்பெருமை தானறியாத் தன்மையன்காண் சாழலோ.

மாணி:—

அருந்தவருக்கு ஆலின்கீழ் அறமுதலா நான்கினையும்
இருந்தவருக்கு அருளுமது எனக்கறிய இயம்பேடீ.

ஊமை:—

அருந்தவருக்கு அறமுதல்நான்கு அன்றருளிச் செய்திலனேல்
திருந்தவருக்கு உலகியற்கை தெரியாகாண் சாழலோ.

அரசன் முதலியோர்:—என்ன ஆச்சரியம்! ஊமைப் பெண்ணைப் பேச வைத்து விட்டாரே!

மற்ருெ:—அது மட்டுமோ! அப் பெண்ணின் வாயால் அரிய சமய தத்துவ உண்மைகளை யெல்லாம் உரைக்க வைத்து, புத்த குருவைப் பேச்சற வல்லவா செய்து விட்டார்?

ஈழ:—பெருமானே! பேசாமடந்தையான என் மகளை பேரறிவுடன் பேசவைத்த தங்களுக்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன். நான் இன்று நடந்த வாதங்களாலும் அற்புதங்களாலும் 'சைவ சமயமே சமயம்; சிவபெருமானே; சமயாதீதப் பழம் பொருள்' என்று அறிந்தமையால், இன்று முதல் நானும் என் குடும்பத்தாரும் சைவராகி, என் தேசமெல்லாம் சிவமணத்தைப் பரப்புவேன்.

சோழ:—வாதவூர் வள்ளலே! தங்களால் சைவசமயம் புத்தொளி பெற்றது. எங்களுக்குப் பெருமை யேற்பட்டது. உங்கள் உபதேசத்தால் நானும் மற்றவர்களும் மெய்யுணர்வு பெற்ருேம்.—தில்லை மூவாயிரவர்களே! திருச்சிற்றம்பலவனுக்கு இன்று சிறப்பாக விழா நடத்துங்கள். குடிமக்களே! நீங்கள் வீதி தோறும் தோரணங்கள் தொங்க விடுங்கள். எங்கும் ரிஷபக்கொடி ஏறிப் பறக்கட்டும். விபூதி மணம் எங்கணும் கமழச் செய்யுங்கள்.

மாணி:—எல்லாம் இறைவன் திருவருள். என்னுலாவது என்ன இருக்கிறது?

ஈழ:—ஐயனே! அகம்பாவத்தால் நாவிழந்த புத்தனையும் மன்னித்து ஊமைத்தனத்தைப் போக்கி யருளுங்கள்.

மாணி:—சிவபெருமான் அவ்விதமே அருளட்டும்.

புத்த:—அருளுருவான அண்ணலே! தங்கள் உபதேச மொழிகளால் என் அறியாமை கட்டோடு ஒழிந்தது. நான் இன்று முதல் சைவனுகி உண்மையான ஜீவகாருண்ய ஒழுக்கத்தை மக்களுக்குப் போதித்து சிவமணத்தைப் பரப்பி வருவேன்.

மாணி:—(பாடுகிருர்.)

"மூலபண்டாரம் வழங்குகின்ருன் வந்து முந்துமினே."

(எல்லோரும் பாடுகின்றனர்.)

## காட்சி 20.

தில்லையம்பதி—மாணிக்கவாசகர் மடம்.

[அம்பலவாணர் ஓர் அந்தணர் வடிவுகொண்டு வருகிருர்.]

மாணி:—ஐயா, நீர் எங்கிருந்து வருகிறீர்கள்?

அம்:—நான் பாண்டி மண்டலத்திலே யுள்ளவன். நீர் ஆண்டவனைப் பரிமேல் வரும்படி செய்தருளினமையால் பாண்டிநாடுபெருமையடைந்தது. நீர் திருப்பெருந்துறையில் இறைவன் திருவடி சேவை செய்து திருக்கழுக் குன்றத்துக்குச் சென்று, வேதாசலம் திருக்கோலங் கண்டு தில்லை யெய்திப் புத்தரை வாதில் வென்ற செய்தி யெல்லாங் கேட்டு பாண்டி நாட்டுமக்கள் மகிழ்ச்சி கொண்டிருக்கின்றனர். நீர் அருளிச் செய்துள்ள திருப்பாடல்களை ஓதக் கருதி அவற்றை எழுதிக்கொண்டு போக இங்கு வந்தேன். ஆதலால், கருணை கூர்ந்து நீவிர் அவற்றைக் கூறி யருளவேண்டும்

மாணி:—ஐயா, அடியேனால் பாடப்பட்ட பாடல்கள் பிறமக்களுக்குப் பயன்படுவதாயின், உம் விருப்பப்படியே மொழிகிறேன். எழுதிக் கொள்ளும். (பாடுகிறார்.)

அம்:—(பாடல்களை எழுதி முடித்து) இவை யனைத்தும் மணிவாசக மட்டுமல்ல, திருவாசக மாகும். இத்துடன், நீர் அம்பலவாணர் மீது ஒரு கோவை பாடினால் நன்றா யிருக்கும்.

மாணி:—

திருவளர் தாமரை சீர்வளர் காவிகள் ஈசர்தில்லைக்
குருவளர் பூங்குமிழ் கோங்கு பைங்காந்தள் கொண்டு ஓங்குதெய்வம்
மருவளர் மாலையோர் வல்லியின் ஒல்கி அனநடை வாய்ந்து
உருவளர் காமன்தன் வென்றிக் கொடிபோன்று ஒளிர்கின்றதே.

அம்:—ஆ! ஆ!! என்ன அழகு! என்ன நவிநயம்! எழுத எழுத எனக்கு இனிக்கிறதே!

(ஏட்டுடன் மறைகிறார்.)

மாணி:—வந்தவர் எங்கே? காணேமே! என் கண் முன்னேயே மறைந்து விட்டாரே! அம்பலவாணர்தான் வந்து திருவிளையாடல் புரிந்தாரோ!

திருச்சிற்றம்பலம்.

அருச்சகர்:—(ஆச்சரியத்துடன்) இதென்ன! பொன்னம்பலத்தின் திருவாயிற்படியில் ஏடொன்று இருக்கிறதே! இதை யார் இங்கு இட்டது? அதிசயமா யிருக்கிறதே! இதை எல்லோருக்குங் கூறவேண்டும்.

மற்ற அர்:—என்னங்காணும் அது? அப்படி விழித்து நிற்கிறீரே!

அர்:—ஓடி வாருங்கள், எல்லோரும். என்னவென்று பாருங்கள்.

ஒருவன் ஏட்டைப் பார்த்து:—இது ஒரு பாடுகின்ற பனுவலாக வல்லவா இருக்கிறது? ஊரிலுள்ளாரையும் அழையுங்கள்; எல்லோர் முன்னிலையிலும் படிப்பதே நலம்.

ஒருவன்:—திருவாசகர், திருச்சிற்றம்பலக் கோவையார் என்ற இரு நூல்கள் இவ்வேட்டில் அடங்கி யிருக்கின்றன. இந்நூலின் முடிவில் ஏதோ எழுதப்பட்டிருக்கிறதே!

மற்:—அது என்ன? உரக்கப் படியும்.

ஒரு:—'வாதவூரன் விளம்பிட அம்பலவன் எழுதியது' என்று எழுதி யெழுதி யிருப்பதோடு, அழகிய திருச்சிற்றம்பலமுடையார் என்று கை யொப்பமும் இடப் பெற்றிருக்கிறது.

மற்:—புத்தரோடு வாதம் புரிந்து வென்ற வாதவூரர் பாடியவைகளா இது?

வே:—அதனால்தான் இறைவனே இதை எழுதி யிருக்கிறார்.

இன்:—வீட்டு நெறிக்கு இதைவிட வேறு சிவநூல் வேண்டாம்.

மற்:—இந்நூல்களை வாதவூராரிடம் எடுத்துச் சென்று பொருள் கூறு மாறு கேட்போம். வாருங்கள்.

எல்:—ஆமாம். இப் பாடல்களுக்கு அவரால்தான் பொருள் கூற முடியும்.

மாணிக்கவாசகர் மடம்.

மாணி:—(பாடுகிறார்.)

"ஒருத்தனே உனை உலகெலார் தேடியும் காணேன்!"

வேதி:—சுவாமி, வணக்கம். பொன்னம்பலம் திருவாயிற்படியில் இவ் வேடு இருக்கக் கண்டோம். இது தங்களால் இயற்றப்பட்ட பாடல்களைக் கொண்டதா யிருப்பதால் இங்கு எடுத்து வந்தோம்.

மாணி:—இறைவா! நீ புரியும் செயல்களின் அந்தரார்த்தத்தை என் னால் அறிய முடியவில்லை. மூலையிலிருக்கும் அற்ப புழுவாகிய அடியேனை என் அம்பலத்தில் இழுத்துவிட்டு வேடிக்கை பார்க்கிறாய்?

வேதி:—இப் பாடல்களின் தத்துவார்த்தம் எங்களுக்கு விளங்கும்படி நீங்களே விரிவுரை கூறவேண்டும்.

மாணி:—திருச்சிற்றம்பலர் திருமுன்பு கூறுகிறேன்; வாருங்கள்.

வேதி:—தங்கள் சித்தம்; எங்கள் பாக்கியம்.

மாணி:—அன்பர்களே! இத் தமிழ்மாலையின் பொருள் (வாசகத்துக்கு வாச்சியம்) இதோ இருக்கும் நடராஜப் பெருமான்தான். (என்று கூறி) இறைவா! அடியேனை ஏற்றுக்கொள்ளும்.

(இறைவனுடன் ஐக்கியமானார்.)

எல்:—என்ன அதிசயம்! வாதவூரர் வள்ளல் சன்னதியுள் சென்று மறைந்து விட்டாரே! இறைவனுடன் இரண்டறக் கலந்துவிட்டார். நம் கண்பெற்ற பாக்கியமே பாக்கியம்.

அனை:—அரகரகரா! (மந்திர ஒலி. வாத்திய ஒலி முழக்கம்.)

(முற்றுப் பெற்றது.)

# உலக புராணம்

[சுவாமி விபுலாநந்தர்.]

பெருங்கதை யென்னும் நூலிலே, நமக்குக் கிடைத்திருக்கும் பகுதியின் தொடக்கத்திலே, 'பொருள்புரி நூலும், அலகை சான்ற உலக புராணமும்' என்னும் அடிகள் காணப்படுகின்றன. உலக புராணம்—உலகத்தின் பழைய வரலாற்றினைக் கூறும் நூல். ஆசிரியர் தொல்காப்பியனார் 'தொன்மைதானே, உரையொடு புணர்ந்த பழமை மேற்றே' என்றாராகலின் புராணத்தினைத் 'தொன்மை' என்றல் பழந்தமிழ் வழக்காமென அறிகின்றோம். 'புராணம் பஞ்சலக்ஷணம்'—அஃதாவது—சர்க்கம், பிரதிசர்க்கம், வம்சம், மந்வந்தரம், வம்சாநு சரிதம்: என ஐவகை யிலக்கணத்தது புராணம் என்பது வடநூலார் கூற்று. சர்க்கம் என்பது உலகத்தின் தோற்றம்; பிரதிசர்க்கம் உயிர்த் தோற்றத்தையும் ஒடுக்கத்தையும் குறிக்கும்; வம்சம் மன்னர் பரம்பரையைக் கூறுவது; மந்வந்தரம் காலவரையறையினையும் மநுக்களது ஆட்சிக் காலங்களையும் கூறுவது; வம்சாநு சரிதம் மன்னர் பரம்பரையோடு தொடர்புடைய கிளைக்கதைகளைக் கூறுவது. மத்ஸ்ய புராணம், அக்கினிபுராணம், பாகவதபுராணம் என்னும் புராணங்களுள்ளே பாதக் கண்டத்தின் பழைய வரலாற்றுப் பகுதிகள் காணப்படுவனவென அறிஞர் கூறுவர். தகடூர் யாத்திரை யென்னுந் தமிழ்த் தொன்மைநூல் நமக்குக் கிடைத்திலது.

தமிழரது பழைய வரலாற்றினைப் பற்றிய சிலச் சில முடிபுகள் தொல்காப்பிய எழுத்ததிகார நச்சினார்க்கினியருரை, இறையனாரகப் பொருள் நக்கீரனாருரை, சிலப்பதிகாரம் அடியார்க்கு நல்லாருரை யென்னும் இவை தம்முள்ளே காணப்படுகின்றன. இம் முடிபுகள் வரலாற்று நூலாசிரியர் (Historians) ஆராய்ந்து கண்ட சரித்திர முடிபுகளோடு ஒருபுடை ஒத்திருக்கின்றனவாதலின், உரை நூல் முடிபுகள் வெறுங் கதைகளல்லவென்பது துணியப்படுகின்றது.

பாண்டிய மன்னர் தமிழ் வளர்த்த முச்சங்கங்களின் வரலாறு இறையனாரகப் பொருளுரையினுள்ளே கூறப்பட்டது. 'சங்கம்' என்பது பிற்காலத்துச் சொல். 'கூடல்' என்னும் பழந்தமிழ்ச் சொல் இப் பொருளினது; இது மதுரைமா நகரின் பெயர்களுள் ஒன்று. தலைச்சங்கத்துப் பெரியோர் இருந்து தமிழாராய்ந்தது கடல் கொள்ளப்பட்ட மதுரை யென்ப.

'வடிவே லெறிந்த வான்பகை பொறாது
பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள
வடதிசைக் கங்கையும் இமயமுங் கொண்டு
தென்றிசை யாண்ட தென்னவன் வாழி'

எனச் சிலப்பதிகாரம் கூறுதலின், குமரியாற்றினுக்குத் தெற்கே பஃறுளி எனப் பெயரிய ஆறு இருந்த உண்மை பெறப்படுகின்றது.

'மூந்நீர் விழவின் நெடியோன்
நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே'

என்னும் புறப்பாட்டுக் கடல்கோளுக்கு முன்னிருந்த தலைச்சங்கத்துப் புலவ ரொருவராற் பாடப்பட்டது. கடல்கோள் வரலாற்றினை அடியார்க்கு நல்லார் சிலப்பதிகார வேனிற்காதை யுரையினுள்ளே விரிவாகக் கூறுகின்றார். இது எப்பொழுது நிகழ்ந்தது என்பதை முதலிலே ஆராய்வாம்.

தலைச்சங்கம் நாலாயிரத்து நானூற்றுநாற்பது ஆண்டும், இடைச்சங்கம் மூவாயிரத்தெழுநூறு ஆண்டும், கடைச்சங்கம் ஆயிரத்தெண்ணூற்றைம்பது ஆண்டும் நிலைபெற்றிருந்தனவென்பது உரை நூன் முடிபு. தலைச்சங்கம் கடல்கோளினாலே அழிந்தது. கடல்கோளுக்குப் பன்னூறாண்டுகளுக்குப் பின் கபாடபுரத்திலே இடைச்சங்கம் தொடங்கப்பட்டிருத்தல் வேண்டும். தலைச்சங்கம் இரீஇய பாண்டியர்கள் காய்சினவழுதி முதற் கடுங்கோன் ஈறாக எண்பத்தொன்பதின்மர். இடைச்சங்கம் இரீஇயினார் வெண்டேர்ச் செழியன் முதல் முடத்திருமாறன் ஈறாக ஐம்பத்தொன்பதின்மர். கடுங்கோனுக்கும் வெண்டேர்ச்செழியனுக்கும் இடைப்பட எத்தனை மன்னர் அரசு புரிந்தனர் என யாம் அறியோம். இடைச்சங்கத்திறுதியிலும் பாண்டிய நாட்டைக் கடல்கொண்டது. கடல்கொள்ளப்பட்டுப் போந்திருந்த முடத்திருமாறன் கடைச்சங்கத்தைத் தொடங்கினான். உக்கிரப் பெருவழுதி காலத்திலே கடைச்சங்கம் ஒழிந்தது. இது கிறிஸ்துவின் பிறப்பிற்கு அணித்தான காலத்திலே நிகழ்ந்ததென எண்ண இடமுண்டு. அங்ஙனமாதலின் தலைச்சங்கத்திறுதிக் கடல்கோள் கி. மு. 5550-ஆம் ஆண்டுக்கு முந்தியதாதல் வேண்டும்.

தமிழரது நாகரிகம் மிக மிகப் பழமை வாய்ந்தது. உலக சரித்திரத்திலே தமிழரே முதன்முதல் நாகரிக வாழ்க்கை யெய்திய சாதியாரென்பதற்கும், கடல்கடந்து சென்று தமது நாகரிகத்தைப் பலப்பல நாடுகளிலும் பரப்பினார் என்பதற்கும், வாணிகத் துறையிலும் கணிதநூல் வானநூல் முதலிய நூற்றுறைகளிலும் வல்லுநரா யிருந்தாரென்பதற்கும் பல சான்றுகள் கிடைத்திருக்கின்றன. இவை தம்மைச் சுருக்கமாக ஆராய்ந்து கூறுதலே 'உலக புராணம்' என்னும் இப் பொருளுரையின் நோக்கமாகும்.

கத்தோலிக்க கிறிஸ்தவ சமய குரவரும், பம்பாய் நகர்ப் பல்கலைக் கழகத்துச் சரித்திர ஆராய்ச்சித் துறைத் தலைவரும் ஆகிய வணக்கத்துக்குரிய எச். ஹீராஸ் சுவாமியார் (Rev. Fr. H. Heras) பழந் தமிழரது வரலாற்றினைப் பெருக ஆராய்ந்து நூல்கள் வாயிலாகவும், பத்திரிகை வாயிலாகவும் வெளியிட்டிருக்கின்றார். ஆரிய நாகரிக முதன்மையை எவ்வாற்றானும் நிலைநிறுத்த வேண்டுமென்னும் விருப்புடைய ஒரு சாரார் இவர்க்கு இன்னல் விளைக்க முனைந்து நிற்பது இவரது கல்வி நிறைவையும் நடுவு நிலைமையையும் தெளிவுறக் காட்டுகின்றது. இவர் ஸ்பெயின் தேசத்திற் பிறந்தவர்; துறவொழுக்க முடையவர்; ஆதலினாலே ஆரியர் பக்கமோ திராவிடர் பக்கமோ சாராது நடுநின்று உண்மை கூறும் ஆற்றல் வாய்ந்தவர். சிந்து நதி தீரத்திலே முகிஞ்சதரோ என்னும் இடத்திலே பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு நிலைபெற்றிருந்த நாகரிகத்தைக் குறித்து இவர் கூறும் முடிபுகளில் ஒரு சிலவற்றை முதலிலே தருவாம்.

இம் முடிபுகள் கல்கத்தா நகரினின்று வெளிவரும் இந்திய நாகரிகம் (Indian Culture) என்னும் ஆராய்ச்சிப் பத்திரிகையிலே 1937-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் வெளிவந்தன. "முகிஞ்சதரோ விளக்கமுற்றிருந்த காலத்திலே சிந்து நாடு (இந்தியா) ஆனது மீனாடு, பறவைநாடு, மரங்கொத்தி நாடு, எழ்நாடு எனும் நாற்பெரும் பிரிவினதாக இருந்தது. சிந்து நதியின் வலப் புறத்திலிருந்த மீனாட்டிலே வாழ்ந்தோரது கொடியிலே இணைமீன்கள் பொறிக்கப்பட்டிருந்தன. இந் நாட்டுத் தலைநகராகிய நண்டூர் என்பதே இப்பொழுது நிலத்தை யகழ்ந்து காணப்பட்ட முகிஞ்சதரோ (இறந்தோர்தரை) என்னும் இடமாகும். உடையூர், ஊரிலூர், எய்கையூர், மூனூர் (வடமொழியாளர் கூறும் திரிபுரம்) என்னும் நகர்களும் மீனாட்டிலிருந்தன. மரங்கொத்தி நாடு பனிபடர்ந்த மலைநாட்டிலிருந்தது. இங்கு வாழ்ந்தோர் சிவலிங்கத்தையும் மூவிலைவேலையும் வழிபட்ட வேலாவிர் ஆவர்." (பிற்காலத்திலே 'வேளிர்', எனவும் 'வேளாளர்' எனவும் வழங்கப்பட்டோர் இவரென எண்ண இடமுண்டு.)

முகிஞ்சதரோவிலிருந்த பழைய மக்கள் மிதுன ராசியினை 'யாழ்' என்னும் பழந்தமிழ்ப் பெயரினாலே வழங்கினார்களென்றும், 'யாழ்' உருவத்தினாலே குறியிட்டார்களென்றும் ஹீராஸ் சுவாமியார் மற்றோரிடத்திலே குறிப்பிட்டிருக்கின்றார் இப் பழைய மக்கள் இசை நூலிலும் வான நூலிலும் அறிவு பெற்றிருந்தமையை இது காட்டுகின்றது. முகிஞ்சதரோ நாகரிகம் பழந்தமிழ் நாகரிகத்தோடும் யூபிறற்றஸ்-டைகிறிஸ் நதிக்கரையிலே பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் விளங்கிய சுமேரிய நாகரிகத்தோடும் தொடர்புடையது என்பது அறிஞர் கருத்து. சுமேரியர் தமிழர் வழிவந்தவர்களே என்பதற்குப் பல சான்றுகள் உள.

பிரித்தானியப் பழம்பொருட் காட்சிச்சாலையிலே (British Museum) எகிப்திய ஆசுரேயப் பகுதிக்கு உதவித் தலைவராகிய எச். ஆர். ஹால் (H. R. Hall) என்னும் பேரறிஞர் தாம் எழுதிய புராதன சரித்திர நூலிலே (The Ancient History of the Near East) பின்வருமாறு கூறுகிறார். "சுமேரியரது உருவச் சாயல் அவர்களது ஓவியங்களிலே தெளிவாகப் புலப்படுகிறது. அது அவர்கள் நாட்டிற்கு அணித்தாக வாழ்ந்த செமித்திய குலத்தார் ஆரிய குலத்தாரின் உருவச் சாயலினின்றும் வேறுபட்டது. அவர்களது மொழியும் மேற்குறித்த இரு சாராரின் மொழிகளினின்றும் வேறுபட்டது. இக்காலத்து இந்தியனின் உருவச் சாயல் பல்லாயிரம் ஆண்டுகளின் முன்பு வாழ்ந்த திராவிட முன்னோரின் உருவச்சாயலை நிகர்த்தது. இக்காலத்து கிரேக்கர் இத்தாலியரின் உருவச்சாயல் ஆரியர் வருகைக்குமுன் அந்நாடுகளில் வாழ்ந்த முன்னோரின் உருவச்சாயலை நிகர்த்திருப்பதுபோல் இந்தியாவிலும் திராவிட உருவச்சாயலே நிலைபெற்று நின்றது. ஆரியகுல உருவச்சாயல் மிக முந்தியே அழிந்துபோயிற்று. பழைய சுமேரியர் திராவிட குலத்தாரென்பது சுமேரிய உருவங்களைக் கூர்ந்து நோக்குவாருக்கு இனிது புலப்படும். திராவிட மொழிகளை இக்காலத்திலும் வழங்கும் தென்னிந்தியனின் உருவத் தோற்றமே பழைய சுமேரியனின் உருவத்தோற்றம். பழைய சுமேரியர் இந்தியாவிலிருந்து கரை வழியாகவும் பாரசீகக்கடல் வழியாகவும் சுமேரு நாட்டிற் குடியேறினார்களென்று எண்ண இடமுண்டு. இவர்கள் குடியேறிய புது நாட்டிற்குக் கொண்டு

வந்த நாகரிகம் சிந்து நதிக்கரையிலே வளர்ச்சி யெய்தியிருக்கலாம். சித்திரங்களை எழுத்தாக வழங்கிய முறையினின்று செப்பமெய்திய இவர்களது எழுத்து முறை பின்னளிலே பாபிலோனியத்திலே சதா முனை யெழுத்தாணிகளாலே பசுமண் வட்டிகைகளிலே எழுதப்பட்டு ("uneiform") என்னும் ஆப்பு வடிவ எழுத்துக்களாக உருத் திரிந்தது இவர்கள் சிந்து நதிக்கரையி விருந்து சுமேரு நாட்டிற்கு வரும் வழியிலே எலம் (Elam) எனனும் நாட்டிலே தமது நாகரிகத்தைப் பரப்பினார்கள்."

சிந்து நதிக்கரையிலிருந்த மீனாட்டு கண்டுராகிய முகிஞ்சதரோவின் வரலாற்றையும் பழைய சுமேரிய வரலாற்றினையும், 'குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள, வடதிசைக் கங்கையும் இமயமுங் கொண்டு தென் றிசையாண்ட தென்னவன் வாழி' என்னும் சிலப்பதிகாரக் கூற்றையும் நாம் படிக்கும்போது தலைச்சங்கத் திறுதிக் கடல்கோளின் பின் பாண்டியனது ஆட்சியிலிருந்த தமிழ் மக்களுள் ஒரு பகுதியார் கடல் கடந்து பாரசீகக் கடல் வழியாகச் சென்று யூபிறுற்றஸ்-ரைகிறிஸ் நதிக்கரையிலிருந்த நாட்டிற் குடியேறி அதற்குச் சுமேரியா என்னும் பெயரிட்டு வழங்கினார்களென்பதும், மற்றொரு பகுதியார் 'வடதிசைக் கங்கையும் இமயமும் கொண்டு, சிந்து நதிக்கரையிலே தாம் குடியேறிய நாட்டிற்கு மீனடு எனப் பெயரிட்டு இணைக்கயல் பொறித்த கொடியையுடையராய் வாழ்ந்தாரென்பதும் புலனாகின்றன. இங்கு உறைந்து சில காலத்தின் பின் கரைவழியாகவும் சுமேரியாவிற்குச் சென்றிருக்கலாம்.

சாலதேய நாட்டுச் சரிதம் (Story of Chaldea) முதலிய பல நூல்களை யியற்றிய றகோசின் (Ragozin) என்னும் பேரறிஞர் தாம் இயற்றிய வேதகாலத்து இந்தியா (Vedic India) என்னும் நூலிலே பின்வருமாறு கூறுகிறார். "செமித்தியர் வருகையின் முன் பழைய பாபிலோனியத்தில் வாழ்ந்த சுமேரிய-அக்கதியருக்கும் இந்தியாவின் வடமேற்குப் பாகங்களிலே வாழ்ந்த திராவிட மக்களுக்கு மிடையேயுள்ள தொடர்பு சிறப்பு வகையானது. இரு சாராரும் ஒரே குலத்தினர். இக்குலத்தைத் தூரானிய குலம் என்னலாம். அக் கதியநாட்டுத் தேல்லோ நகரத்திலே கண்டெடுக்கப்பட்டதும் கி. மு. நாலாயிரம் என்னும் ஆண்டிற்கு உரியதுமாகிய சிலைத்தலையானது தலைப்பாகையணிந்த திராவிட உருவத் தலையினது தோற்றமுடையது." "சாலதேயப் பழைய நகராகிய ஊர் என்னுமிடத்திலே கி. மு மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னிருந்த ஒரு மனையினுள்ளே தென்னிந்தியத் தேக்கமரத்துண்டொன்று கண்டெடுக்கப்பட்டது." தென்னிந்தியாவுக்கும் சாலதேயத்திற்கும் இற்றைக்கு ஐயாயிரம் ஆண்டுகளின் முன்னே வாணிகத் தொடர்பிருந்த தென்பதற்கு இது சான்றாகும்.

இருக்குவேத இந்தியா (Rig-Vedic India) என்னும் நூலாசிரியராகிய அவிநாஸ் சந்திரதாஸ் (Abinash Chandra Das) 'சோழதேயம்' என்னும் மொழிச்சிதைவே 'சாலதேயம்' (Chaldea) என்றும், அந் நாட்டிற் சோழகுலத்தார் குடியேறியது இற்றைக்குப் பதினாயிரம் ஆண்டுகளின் முன்னாதல் வேண்டுமென்றும் பல காரணங் காட்டி விளக்குகிறார். சாலதேய நாட்டுத் தலைநகர் ஊர் என்னும் பெயரினது. சாலதேயத்தார் வான

நூலிலே மிகத் தேர்ச்சியுடையவரா யிருந்தார். சிரியஸ் விண்மீன் (Sirius)* சூரியனோடு ஒருங்கு உதிப்பது ஆயிரத்து நானூற்றெண்பது ஆண்டிக்கு ஒரு முறையாகும் என அறிந்து அக்கால வெல்லையினை ஒரு சோதிவட்டம் (Sothic Cycle) என வழங்கினர். அவர் கொண்ட ஆண்டு முந்நூற்றறுபது நாட்களை யுடையது. $365\frac{1}{4}$ நாள் கொண்டது ஓராண்டு எனக் கொள்ளுமிடத்துச் சோதிவட்டம் ஆயிரத்துநானூற்றறுபது ஆண்டாகும்.

சோதிவட்டத்தினாற் காலத்தைக் கணித்தறியும் முறையானது தமிழர் வேற்றுநாட்டிற் குடியேறுதற்கு முன்னே அவர் தம்மால் அறியப்பட்டிருந்த தென்பதற்குச் சங்கமிருந்த காலவெல்லைகளே சான்று பகருகின்றன. தலைச் சங்ககாலம் மூன்று சோதிவட்டம் ($3 \times 1480 = 4440$), இடைச்சங்ககாலம் இரண்டரைச் சோதிவட்டம் ($2\frac{1}{2} \times 1480 = 3700$), கடைச்சங்ககாலம் ஒன்றேகாற் சோதிவட்டம் ($1\frac{1}{4} \times 1480 = 1850$). சிரியஸ் விண்மீன் சூரியனோடு ஒருங்கு உதித்தநாளிலே கடல்கோளினாலே தலைச்சங்கம் அழிந்த தெனக் கொளின், அடுத்துச் சிரியஸ் விண்மீன் சூரியனோடு ஒருங்குதித்த நாளிலே கபாடபுரத்திலிருந்த பாண்டியமன்னர் இடைச்சங்கத்தைத் தொடங்கினாரெனக் கொள்வது பொருத்தமுடைத்து. அவ்வாறு கொளுமிடத்துக் கடுங்கோனுக்கும் வெண்டேர்ச் செழியனுக்கும் இடைவிட்ட காலம் 1480 ஆண்டு ஆதல்வேண்டும். இதனுடன் 5550 கூட்ட 7030 ஆகும். ஆதலினாலே தலைச் சங்கத் திறுதிக்கடல்கோள் கி. மு. 7000 ஆண்டு வரையிலே நிகழ்ந்திருக்கவேண்டும் எனக் கொள்ளலாம்.

சதபதப்பிராமணம் என்னும் வடமொழி நூலிலே குறிக்கப்பட்ட மக்வந்தரச் சலப்பிரளயம் கி. மு. 7500க்குப் பிந்தியதாமென அவிநாஸ் சந்திரதாஸ் இருக்குவேத இந்தியா என்னும் நூலிலே காட்டுகின்றார். ஆதலினாலே தலைச்சங்கத்திறுதிக்கடல்கோளும் மக்வந்தரச் சலப்பிரளயமும் ஒரே நிகழ்ச்சியே யாம் என்பது தெளிவாகின்றது. தெற்கே நிலம் கடலில் அமிழ்ந்தது; விந்தியத்திற்கு வடக்கே யிருந்த ராஜபுத்தானக் கடல் வற்றியது.

மத்ஸ்யபுராணத்திலே சலப்பிரளய வரலாறு பின்வருமாறு கூறப் படுகிறதென றகோசின் தமது நூலிலே காட்டுகிறார். "சத்தியவிரதன் என்னும் திராவிடமன்னன் மலயத்தில் (மலையாளத்தில்) ஓடுகின்ற 'கிருதமாலா' என்னும் நதிக்கரையிலே தன் முன்னோர்க்கு நீர்க்கடன் செய்யும்பொழுது அவன் கைத்தலத்திலே ஒரு சிறுமீன் அகப்பட்டது. மன்னன் காவற்கடவுளாகிய மாயோனை வழிபடுவோன். அக்கடவுளே சிறுமீன் வடிவாக அவன் கையைச் சேர்ந்தார். சலப்பெருக்கிலே உலகம் அழியப்போகிறதென்றும் நீதிமானாகிய அம்மன்னன் ஒரு நாவாயினை அமைத்து அதனுள்ளிருப்பின் தான் அவனைக் காப்பதாகவும் சிறுமீன் கூறிற்று. மன்னன் மீனைக் காத்துவர அது மிகப் பெரிதாக வளர்ந்து கடலினை யடைந்தது. பின்பு சலப்பெருக்கு பெருகுதலும் மீன் தோன்றி மன்னனது நாவாயை இழுத்துச்

* இவ்விண்மீனின் தமிழ்ப்பெயர் 'மிருகவியாதர்' ஆமெனத் திருக்கணித சோதிடர் பிரமஸ்ரீ சி. சுப்பிரமணிய ஐயர் ஈழகேசரியிற் குறிப்பிடுகிறார்.

சென்று இமயமலையிலே நௌபந்தனம் என்னும் சிகரத்தை யடைந்தது. இச்சத்தியவிரதன் மறுபிறப்பிலே வைவச்சுதன் மகனான மநுவானான்." இது மத்ஸ்ய புராணத்துக் கூற்று.

மநுவரசன் சோழகுலத்துமன்னன் எனத் தமிழ்நூல்கள் கூறுகின்றன. சத்தியந்தவறாத நீர்மை இக்குலத்தாருக்கு இயல்பாக அமைந்ததென்பதைச் சிபி, மநுநீதிகண்ட சோழன் என்றின்னோர் வரலாற்றினால் அறிகின்றோம். இக்குலத்துமன்னன் சத்தியவிரதன் என்னும் சிறப்புப்பெயரையும் மநு என்னும் இயற்பெயரையும் உடையவனாக இருக்கவேண்டும்; இவன் கடுங்கோன் என்னும் பாண்டியமன்னன் காலத்தவனாகவேண்டும்.

கடல்கோளாகிய சலப்பிரளயக் கதை தென்னாட்டிலிருந்து வடநாட்டிற்குச் சென்றது. அஃதன்றியும் சுமேரிய நாட்டிற் குடியேறிய தமிழரோடு யூபிரடீஸ்-டைகிறிஸ் நதிக்கரைக்குச் சென்றது. அந்நாட்டிலே முன்னாளில் வாழ்ந்த பெரோசஸ் (Berossos) என்னும் ஆசிரியர் இச் செய்தியை விரிவாகக் கூறியிருக்கின்றார். நாம் முன்னே குறிப்பிட்ட எச். ஆர். ஹால் (H.R. Hall) என்னும் பேரறிஞர் தம் நூலிலே இதைக் குறித்துக் கூறியிருப்பதனை யொழிபெயர்த்துத் தருவாம். அதன்முன் தொல்காப்பிய வுரையிலே ஆசிரியர் நச்சினார்க்கினியர் கூறிய குறிப்பொன்றினை உளங்கொள்ளுதல் இன்றியமையாததாகும். நிலந்தரு திருவின் நெடியோனாகிய 'பாண்டியன் மாகீர்த்தி இருபத்து நாலாயிரம் யாண்டு வீற்றிருந்தானாதலின், அவனும் அவன் அவையிலுள்ளோரும் அறிவு மிக்கிருத்தலின் அவர்கள் கேட்டிருப்ப' என்றலின் தமிழ் மன்னனது அவைக்களத்தாரின் அறிவு மிகுதி தெளிவாகின்றது. கடல்கோளின் முன்னிருந்த இம்மன்னன் இருபத்துநாலாயிரம் யாண்டு வீற்றிருந்தானென்பது நமக்கு வியப்பைத் தருகின்றது. சுமேரிய சரித்திரத்திலும் சலப்பிரளயத்திற்குமுன் இருந்த மன்னர் எண்மருள் ஒவ்வொருவரும் 18,600 முதல் 43 200 வரையுமுள்ள எல்லையினவாகிய ஆண்டுகள் வீற்றிருந்தார்கள் என்னும் செய்தி அகப்படுகின்றது. இரு வரலாற்றுக்கும் தொடர்புண்மை இதனாலும் புலப்படுகின்றது.

கிறிஸ்தவ சமய நூலாகிய விவிலிய நூல் ஆதியாகமத்திலே மனித வர்க்கத்தாரின் ஆதித்தந்தை தாயராகிய அத்தன் (Adam), அவ்வை (Eve) என்னும் இருவரையும் ஆண்டவன் படைத்த வரலாறும், இவரது சந்ததியாரது வான்முறையும், அச்சந்ததியாருள்ளே நீதிமானாக விளங்கிய நோா (நூகு, நோவா, Noah) வின் வரலாறும், சலப்பிரளய வரலாறும், நோவும் அவன் புதல்வராகிய செம், ஹாம், ஜாபெத்து என்னும் மூவரும் குடும்பத்தாரும் சலப்பிரளயத்திலே மாண்டு போகாது காக்கப்பட்ட வரலாறும் பிறவும் கூறப்பட்டன. பெரியோனாகிய நோா என்னும் பொருளினதாகிய மாநோ என்னும் பெயர் மநு என்பதை ஒத்திருத்தலை நோக்குக. சலப்பிரளய வரலாற்றினை எபிரேயர் பாபிலோனியரிடமிருந்து பெற்றார்களென்பது அறிஞர் கருத்து.

எச். ஆர். ஹால் கூறுவது வருமாறு:—"பழைய பாபிலோனியத்திலே தெய்வ மன்னர் பரம்பரையொன்று மிக மிக நீண்டகாலம் அரசியற்றிய மன்னர்களையுடையதா யிருந்ததெனப் பாபிலோனிய புராணக் கதை

கள் கூறுகின்றன. இத்தகைய வரலாறு எகிப்து நாட்டிலும் உண்டு. இம் மன்னர் பலரது பெயர்கள் பெரோசஸ் எழுதிய சரித்திரத்தில் நமக்குக் கிடைத்த பாகங்களிற் காணப்படுகின்றன. இப் பரம்பரையிலே முதலிற் றோன்றிய அலோரஸ் (Aloros) என்னும் மன்னன் 36,000 ஆண்டு அரசு புரிந்ததாகக் கூறப்பட்டிருக்கிறது. இவன் வழி தோன்றிய கிசுத்திரோஸ் (Xisuthros) என்பான் காலத்திலே சலப்பிரளயம் நிகழ்ந்தது. ஒரு பாதி மனித வடிவமும் ஒரு பாதி மீன் வடிவமுமாகிய உவண்ணஸ் (Oannes) பாரசிகக் கடலினின்று புறப்பட்டு மனிதருக்கு எழுத்துமுறையையும் நாகரிக வாழ்க்கையையும் கற்பித்தார். கிசுத்திரோஸ் கசிசத்திரன் (Khasisadra) ஆக இருக்கலாம். இவன் காலத்திலே சித்நபிஸ்தின் (Sit-Naphisthin) என்பான் பேழையுட் புகுந்து சலப்பிரளயத்தைக் குறித்துப் பெரோசஸ் சொல்லும் வரலாறு எபிரேயர் வழிவந்ததல்ல. அவர் தமது முன்னோர் வழிவந்த கர்ண பரம்பரைக் கதையையே எழுதுகிறார். எபிரேயர் வரலாறு இதனினின்றும் எடுக்கப்பட்டது." கிசுத்திரோஸ், கசிசத்திரன் என்பவற்றிற்கும் சத்தியவிரதனுக்குமுள்ள ஒலியொற்றுமையை நோக்குக.

கல்கத்தாவிலிருந்து வெளிவரும் நியூ ரிவியூ (New Review) 1941 செப்டம்பர்ப் பகுதியிலே வண. ஹீராஸ் சுவாமியார் இந்தியாவிலும் ஸ்பெயின் தேசத்திலும் தாம் செய்த பரந்த ஆராய்ச்சியின் முடிபாகக் கிடைத்த உண்மைகளைத் தெளிவுபெற எழுதுகின்றார். 'Oannes' என்னும் பெயரை 'Uvanna' எனத் தருகின்றார். இது காவற் கடவுளின் பெயராகிய 'உவணன்' ஆக இருக்கலாம். மற்றொரு தலைவன் பெயரினை 'Odakon' எனத் தருகிறார், இது தமிழ், 'ஓதக்கோன்' என்பதற்கு ஐயமில்லை. ஹீராஸ் சுவாமியார் கூறுவது: "எனது ஆராய்ச்சியிலே கண்ணுற்றவற்றினைக் கூறுகிறேன். பழைய திராவிட மக்கள் இந்தியாவினின்றும் புறம்போந்து தூரதேசங்களிலே (அந்நிய நாடுகளிலே) சிறப்பாகச் சுமேரியா நாட்டிலே குடியேறுகிறார்கள். பெரோசஸ் கூறியிருப்பதுபோல, உவணனும், ஓதக்கோனும் தலைவர்களாக இம்மக்களை அழைத்துச் செல்கின்றனர். இந்தியாவிலே மொகிஞ்சதரோவிலும் பிறநகரங்களிலும் இவர்கள் செங்கல்லினாலே வீடுகள் கட்டியதுபோலச் சுமேரியாவிலும் கட்டுகிறார்கள். இச்செய்தி ஆதியாகமத்திலே குறிப்பிடப்பட்டிருக்கிறது. அங்கிருந்து இவர்கள் சிரியா நாட்டிற்குச் சென்று ஹித்திய (Hittite) மன்னர் பரம்பரைக்கு அடிகோலுகிறார்கள். பின்பு மத்தித்தரைக் கடலோரத்திலே குடியேறிப் 'பாணிகள்' என்றும் பின்னரிலே 'பினீசியர்' (Phoenicians) என்றும் வழங்கப்பட்ட குலத்தினராய்ப் பழங்காலத்திலே பெருஞ் சிறப்போடு விளங்கிய வாணிகத் தொழிலை நடத்துகிறார்கள். பின்பு கிரேக்க இத்தாலிய நாடுகளிலும் அணித்தான தீவுகளிலும் குடியேறி மீனவர் (Minoans) எத்துருஸ்கர் (Etruscans) என்னும் பெயரோடு வாழுகிறார்கள்."

"இவை இவ்வாறாகத் திராவிட குலத்தின் மற்றொரு பகுதியார் அராபி நாட்டின் தென்திசையதாகிய யேமன் (Yemen) நாட்டிலே குடியேறி அந்நாட்டுக்குப் பண்டு எனப் பெயரிட்டு வாழ்ந்து அங்கிருந்து நீலநதிக் கரையிலுள்ள நாட்டினை யடைந்து எகிப்தியர் என்னும் பெயரோடு சிறந்த நாகரிகத்தைத் தோற்றுவிக்கிறார்கள். பின்பு ஆபிரிக்காவின் வடபக்கத்திலே

நுமீதியர் (Numidians), பேர்பேரியர் (Bereberians) என்னும் பெயரோடு வாழ்ந்து பின்னர் ஸ்பெயின் தேச ஐபீரிய குடாநாட்டை யடைந்து வாழ்கின்றனர். உரோமர் இவர்களை இந்நாட்டிற் கண்டு ஐபீரியர் (Iberians) என்னும் பெயரினால் வழங்குகின்றனர். பின்பு பிரித்தானியத் தீவுகளை யடைந்து (திராவிடச் சிதைவாகிய) துருயிதர் (Druids) என்னும் பெயரோடு வாழ்கின்றனர்." பேரறிஞராகிய ஹீராஸ் சுவாமியார் ஒவ்வொரு கூற்றுக்கும் தக்க ஆதாரம் காட்டுகின்றார். அவற்றை யெல்லாம் குறித்த நியூ ரிவியூ வெளியீட்டிலே காணலாம்.

மேலே நாம் திராவிடர் என்று வழங்கிய குலத்தினைத் தமிழர் என்றே சொல்லலாம். கன்னடம், தெலுங்கு, மலையாள மொழிகளும் அவற்றை வழங்கும் மக்களும் தமிழிலும் தமிழரிலும் இருந்து தோன்றிய காரணத்தினாலே பண்டைச் சரித்திரத்திலே திராவிடமென்பது தமிழையேயாம். ஆரியர் வருமுன் இந்தியா முழுவதிலும் பரவியிருந்தவர் தமிழரே. பலுச்சிஸ்தானத்தின் தெற்கே தமிழின் கிளை மொழியாகிய பிராகுவி (Brahui) இன்றும் நிலைத்திருக்கிறது. பாரசீகத்தின் தென்பாகம் மெசொப்பொட்டேமியா, அராபியா, சீரியா, எகிப்து, ஆபிரிக்காவின் வடபாகம், கிரேத்து (Crete) தீவு, கிரேக்கநாடு (யவனபுரம்), இத்தாலிய நாடு (உரோமாபுரம்), ஸ்பெயின் நாடு, பிரித்தானியா என்று இன்னனவாகிய நாடுகளிலெல்லாம் பழந்தமிழர் குடியேறி நாகரிகத்தைப் பரப்பினார்கள். காடு கெடுத்து நாடாக்கலும், குளந்தொட்டு வளம்பெருக்கலும் தொன்றுதொட்டுத் தமிழருக்கு இயல்பாகிய செயல்கள். செங்கற் கட்டிடங்களை முதலிலே தமிழரே கட்டினார்கள். கடலோடும் கப்பல்களை முதலிலே யமைத்தார்கள். கணிதநூல், வானநூல், இசைநூல் என்னு மிவற்றிலே விசேஷத் திறமை படைத்திருந்தார்கள்.

தமிழர் வழிவந்த எகிப்தியர்களும் ஆயிரத்து நானூற்றெண்பது ஆண்டு கொண்ட சோதிவட்ட அளவினாலே காலவரையறை செய்தார்கள். இற்றைக்கு ஐந்து சோதி வட்டத்திற்குமுன்னே உலகமிருந்த நிலையை நோக்குவமாயின், நாம் மேலே குறித்த இடங்களி லெல்லாம் தமிழ்க்குடிகள் வாழக் காண்போம். சீனத்திலே மஞ்சள் நிற மங்கோலிய மக்கள் வாழக் காண்போம். ஆபிரிக்காவின் நடுப்பாகத்திலும் தென்பாகத்திலும் இந்தியாவிற் சில இடங்களிலும் கிழக்கிந்தியத் தீவுகளிலும் பழைய லெமூரியாவிலிருந்து பரந்த கருமைநிற நீகிரோவர் வாழக் காண்போம். அமெரிக்காவிலே செந்நிற மக்கள் வாழக் காண்போம். பாலஸ்தீனத்திலும் அடுத்த நாடுகளிலும் செமித்திய குலமக்கள் வாழக் காண்போம். பாரசீகத்திலும் மத்திய ஆசியாவிலும் மத்ய ஐரோப்பாவிலும் வடதுருவத்துக்கு அணித்தான நாடுகளிலும் வெள்ளைநிறமும் நீலக்கண்ணும் செம்பட்டை மயிருமுடைய ஆரியமக்கள் வாழக் காண்போம்.

ஆரிய குலத்தவராகிய யவனர் கிரேக்க நாட்டைக் கைப்பற்றுமுன் அங்கு வாழ்ந்த திராவிட குல மீனவர் (Minoans) கிரேத்தத் தீவிலே (Crete) அமைத்த கட்டிடங்களும் சிலைகளும் மிகச் சிறந்தவை. இவையெல்லாம் அண்மையிலே நிலத்தினை யகழ்ந்து எடுக்கப்பட்டிருக்கின்றன. எகிப்து நாட்டிலும் மெசொப்பொட்டேமியாவிலும் மொகிஞ்சதரோவிலும்

அகழ்ந்து கண்ட பழம்பொருள்களின் ஆராய்ச்சிகளைக் குறித்துச் சிறந்த வரலாற்று நூல்கள் ஆங்கில மொழியிலே வெளிவந்திருக்கின்றன. முகிஞ்சதரோவினைக் குறித்து அண்மையிலே ஒரு தமிழ் நூல் வெளிவந்திருப்பதை யறிந்து பெருமகிழ்வடைகின்றேன். இன்னும் பல வரலாற்று நூல்கள் தமிழ்மொழியிலே தோன்றவேண்டும். தமிழ்மக்கள் அவை தம்மைச் சிந்தனையோடு படிக்கவேண்டும்.

பிரித்தானிய சங்கம் (British Association) என்னும் ஆராய்ச்சிக் கழகத் தலைவராகிய ஸர் ஜான் எவன்ஸ் (Sir John Evans) என்னும் பெரியார் தமது தலைமையுரையிலே பின் வருமாறு கூறுகிறார். "மனித சாதியாரின் தொட்டில் தென்னிந்தியாவாக இருக்கலாம். வடதிசை மக்களின் முன்னோரும் மத்தித்தரைக் கடற்கரையிலுள்ள நாடுகளில் வாழ்ந்த மக்களின் முன்னோரும் முதலிலே இருந்து சென்ற இடம் தென்னிந்தியாவாக இருக்கலாமென்று ஆராய்ச்சித்துறைகள் காட்டுகின்றன." இள மாணவர்க்குக் கல்வி பயிற்றும் போதகாசிரியர்கள் தமிழ்க்குலத்தாரின் பழமையையும் செழுமையையும் ஆராய்ந்துணர்ந்து மாணவர்க்கு அறிவுறுத்துவார்களாக.

சோதிவட்டத்தைப் பற்றிய குறிப்பு:—பழைய எகிப்தியர் முப்பது நாட் கொண்ட பன்னிரண்டு மாதங்களை ஓர் ஆண்டாகக் கொண்டனர். பின்பு ஐந்து நாட்களை ஒரு மாதத்திலுஞ் சேராத மேலதிக நாட்களாகக் கூட்டிக் கொண்டனர். $365\frac{1}{4}$ நாள் ஓர் ஆண்டாமாதலின், ஆண்டுத் தொடக்கத்திலே சூரியோதயத்தின்முன்னே கீழ்த்திசையிலே தோன்றிய ஒளிபொருந்திய விண்மீனொன்று நான்கு ஆண்டுகளின்பின் ஒருநாள் பிந்தித் தோன்றியது. இவ் விண்மீனை எகிப்தியர் சோதி' யென்றனர். மேனாட்டார் 'சீரியஸ்' என்றனர். இந்தியவானநூலில் இது 'மிருகவியாதர்' என வழங்கப்பட்டதென அறிகின்றோம். இவ்விண்மீன் ஒவ்வொரு நான்காண்டிற்கும் ஒருநாள் தள்ளித் தோன்றும். 1460 ஆண்டுகள் கழிந்தபின் மீண்டும் ஆண்டுப்பிறவிலே தோன்றும். இக்காலவெல்லையினைப் பழைய எகிப்தியர் ஒரு சோதிவட்டமெனக் கொண்டனர். $1460 \times 365\frac{1}{4} = 1461 + 365$ ஆதலின் 1460 ஆண்டில் ஓராண்டு அதிகப்படலாயிற்று. கி. பி. 139-ல் ஒரு சோதிவட்டந் தொடங்கியது. ஆதலால் முன்னுள்ள சோதிவட்டங்களின் தொடக்கம் கி. மு. 1321, 2781, 4241, 5701 ஆவன. கி. மு. ஐயாயிரத் தெழுநூற்றொன்றிலாவது, நாலாயிரத் திருநூற்றுநாற்பத் தொன்றிலாவது எகிப்தியர் இந்தக் கணக்கைத் தொடங்கியிருக்கவேண்டும்.

$1460 \times 5 = 20 \times 365$ ஆதலின் பழந்தமிழர் ஆண்டு 360 நாளாக வைத்து 20 ஆண்டினைச் சேர்த்துச் சோதிவட்டத்தை 1480 ஆண்டாக்கினர். 20 ஆண்டில் எஞ்சிநின்ற 100 நாட்களையும் முன்பு மீந்துநின்ற ஓராண்டினையும் எண்ணவில்லை. 1480 ஆண்டு கொண்ட காலவெல்லையினைக் கருவியாகக் கொண்ட மூன்று சங்கங்களுமிருந்த காலம் நிச்சயிக்கப்பட்டது. பழைய எகிப்திய சரித்திரத்திலும் சோதிவட்டம் கருவியாகவே காலவெல்லை கணிக்கப்பட்டது.

---

# சம்பாவதி

('கார்த்திகேயன்')

## 1

நமது பரதகண்டத்தில் வீரத்திலும், தீரத்திலும், அழகிலும், ஆண்மையிலும் சிறந்து விளங்கியவர்கள் இராஜபுத்திர வகுப்பினர்களே என்பது தேச சரித்திரங் கண்ட உண்மை. அவர்களில் ஆண்மக்களும், பெண்மக்களும் காட்டும் வீர உணர்ச்சியின் வேகத்தையும், சுதந்திர தாகத்தின் ஆழத்தையும் நம்மவர் யாருங் கண்டு திகைப்புறுவர் என்பதிற் சிறிதும் ஐயமில்லை. அஞ்சா நெஞ்சர்களாய், அசகாய சூரர்களாய், உயிரினும் மானமே பெரிதென மதித்தவர்களாய் வாழ்ந்த அவர்களைக் கண்டு அக்பர்போன்ற மொகலாய முடிமன்னர்களும் அவர்களது கூட்டுறவைப் பெரிதும் விழைந்தார்கள் என்றால், அவர்களது மனோவன்மையை என்னென்று கூறுவது?

அக்பர் சக்கரவர்த்திக்கும், இராஜபுத்திர மன்னனாகிய ராணா பிரதாபருக்கும் பற்பல விடங்களில் போர் மூண்டது. முடிவில் ராணா தன் காட்டை விட்டுவிட்டு, அரவல்லி மலைகளிற் சென்று அதன் சாரல்களில் வசிக்க நேர்ந்தது. அப்போது அவனுடைய மனைவி குணவதி, 11 வயது புத்திரி சம்பாவதி, 4 வயது புத்திரன் சுந்தர்சிங் முதலியவர்களும் அவனுடன் வனவாழ்க்கையில் பிரவேசித்தனர்.

ஆங்கு அடர்ந்து வளர்ந்திருந்த மூங்கிற் காடுகளிடையே, தழைகளாலும், கொடிகளாலும் சமைக்கப்பட்டதொரு குடிசையிலே அவர்கள் யாவரும் வசித்து வந்தனர். பல்வேறு இயற்கை வளங்களின் மத்தியிலே, பசுந்தழைகளினூடே ஊடுருவிப் பாயும் கதிரவனது கிரணங்களின் காந்தி, அக்குடிசைக்குப் புதுமையான பச்சை நிறவொளியைப் பரப்பியது. இத்தகைய இயற்கைக் காட்சி நிறைந்த குடிசைக்குச் சற்று அப்பால் சம்பாவதியும் சுந்தர் சிங்கும் வாடி வதங்கியுலர்ந்த கொடிகளென நின்றிருந்தனர். அரசபோகத்தை யெல்லாந் துறந்து நிர்மானுஷ்யமான ஒரு வனத்தின் மத்தியில் வசிப்பது என்ன இலேசான காரியமா? வனவாழ்க்கையால் அரசபுத்திரர்களான அவர்களது வதனங்களில் இயற்கையா யிருக்கவேண்டிய செந்நிறக் காந்தி மங்கிப் போய்விட்டது. அவர்களது கன்னங்களாகிய ரோஜா மலர்கள் வாடிக் கருகிப் போயின.

## 2

ஒருநாள் காலை நேரத்தில் சம்பாவதி ஒரு பூமேடையில் அமர்ந்துகொண்டு தனது தம்பி சுந்தர்சிங்கை மகிழ்விக்க எண்ணி அவனுக்காக ஒரு மலர் மாலை தொடுத்துக் கொண்டிருந்தாள். அச்சமயம் சுந்தர்சிங் அண்மையிலோடிக் கொண்டிருந்த நீரோடை யொன்றில் கற்களை வீசி அதனால் நீரோட்டத்தின்மீ துண்டாகும் வட்டமான அலைகளைக் கண்டு களித்துக் குதித்தவண்ண மிருந்தாள். சில நிமிஷங்கள் சென்ற பின்பு பசி வருத்தவே, தன் தமக்கையை நோக்கி, "சம்பீ! எனக்குப் பசிக்கிறதே!" எனக்

கூறி அழத் தொடங்கினன். அதுகண்ட சம்பாவதி அவனைத் தன்னருகே யணைத்து முத்தமிட்டு அவன் பசியை மறக்கும் பொருட்டு ஒரு கதை சொல்லலானள்.

"முன்னொரு காலத்தில் ஒரு சக்கரவர்த்தி துரதிர்ஷ்டவசமாகத் தன் ராஜ்யத்தை இழக்க நேரிட்டது. அதனல் அவர் காடுகளில் வசிக்க நேர்ந்தது. ஒரு தினம் மிக்கப் பசியாயிருந்ததால் தன்னிடமிருந்த ஒரு சிறு ரொட்டித் துண்டை எடுத்துத் தின்னப் போனர். அப்போது ஆகாயத்தில் வட்டமிட்டுக் கொண்டிருந்த ஒரு கழுகு அதைப் பற்றிக்கொண்டு போய் விட்டது.........."

"அப்போது அந்த மன்னர் தம் ரொட்டி போய்விட்டதே என்று அழுதாரா?" என்று சிறுவன் கேட்டான்.

"இல்லை. உன்னைப்போல இந்தச் சின்ன காரியத்திற்கெல்லாம் அவர் அழமாட்டார்." என்று சம்பாவதி கூறியபோது சுந்தர்சிங்கின் முகம் நாணத்தால் சிவந்தது. தனக்காகவே அவள் அக்கதையைக் கூறினள் என் பதை யுணர்ந்தான்.

ஆனலும் சுந்தர்சிங் சிறுவன்தானே! மீண்டும் பசி அவனை வருத்திய போது, "அக்கா! என்னல் பொறுக்க முடியவில்லையே! நான் அழாமல் என்ன பண்ணுவேன்? இல்லாவிட்டால் தின்ன ஏதேனும் கொடு" என வுரைத்து மறுபடியும் அழத் தொடங்கினன்.

அவ்வாறு அவன் வருந்தியது சம்பாவதியின் இளமை உள்ளத்தைக் குழைத்தது. உடனே அவனைக் கட்டிப் பிடித்துக்கொண்டு தான் தொடுத்த மாலையை அவன் கழுத்தைச் சுற்றி அணிவித்தாள். அப்படியே அவனைத் தன் கைகளில் ஏந்தியபடி தூக்கிக்கொண்டு குடிசையை நோக்கி நடந்தாள்.

## 3

குடிசையினுள் ராணுவும் ராணியும் சோகம் நிறைந்த முகத்தினர்களா யமர்ந்திருந்தனர். அப்போது ராணு ஒரு நீண்ட பெருமூச்சோடு, "ராணி! நமக்கு நேர்ந்த இன்னல்களை யெல்லாம் பார்த்தனையா? ஆகா! இந்தக் கொடிய வறுமைப்பிடியில் நாம் சிக்கிக்கொண்டதா லல்லவா நம் குடிசை தேடிவந்த அந்தச் சந்நியாசியை நாம் வெறுங்கையுடன் அனுப்ப நேர்ந்தது! சித்தூர் மன்னர்களின் பெருமை என்ன? அவர்களது கொடைத் திறம் என்ன? அவைகளையெல்லாம் இழந்து ஒரு பரதேசிக்குக்கூட என்னல் உண வளிக்க முடியவில்லை என்ருல், ஆ! என் வாழ்க்கை எவ்வளவு கேவலமாய்ப் போய்விட்டது? இனி நான் இவ்வுலகில் உயிருடனிருப்பதால் என்ன பயன்? ..........." எனப் பகர்ந்தவாறே நிலத்திற் சாய்ந்தான். உடனே ராணி அவனைத் தூக்கியெடுத்துத் தன் மடிமீது படுக்க வைத்துக்கொண்டு தன் புடவை முன்ருனையால் விசிறினள்.

அவள் செய்த உபசாரங்களால் ராணு விரைவில் தன் கண்களைத் திறந்தான். பிரஞ்ஞையும் வந்தது. அப்போது ராணி, "நாதா! இவ்வாறு நீங்கள் விசனப்படுதல் சரியல்ல. உள்ளத்தெழும் துன்பங்களையெல்லாம் இவ்

வாறு வாய்விட்டுக் கூறிப் பெருக்கிக்கொண்டு கலங்குதல் தங்களைப்போன்ற மன்னர்களுக்கு அழகன்று. கடந்து போனவைகளை மீண்டும் மீண்டும் நினைவு கூர்வதால் உள்ளம் உடைந்துபோகும். ஆதலால் இவற்றையெல்லாம் விட்டுக் கடவுளிடத்தில் பூர்ணமான நம்பிக்கைகொண்டு நம்முடைய துன்பங்களெல்லாம் ஒழிய அவரைப் பிரார்த்தியுங்கள். அவரே நம்மெல்லோரையும் ஆதரிக்க வல்லவர்! அவரைத் தியானிப்பதைவிட்டு ஒவ்வொரு சிறு சம்பவத்தையும் உன்னியுன்னி மனதைப் புண்படுத்திக் கொள்வது தங்களுக்கு ஏற்றதல்ல" என்றாள்.

"இல்லை யில்லை. நீ தவறாக எண்ணிக்கொண்டு விட்டாய். எனக்கு அல்லது என் குடும்பத்தாருக்கு நேரிட்டுள்ள துன்பத்துக்காக நான் ஒரு சிறிதும் வருந்தவில்லை. எத்தனையோ தினங்கள் நாம் உணவின்றி யிருக்கவில்லையா? நமது குமாரர்களான அக்ஷயனும், சுவர்ணம்பாளும் உணவில்லாததானே உயிர் துறந்தனர்! அதற்கெல்லாம் நான் கலக்கமுற்றேனா? இது உனக்குத் தெரியாதா? இன்னும் பார்! கடந்த சில நாட்களாக நீ ஆகாரமில்லாததானே அயர்வுறுகிறாய்! இதற்காகவும் நான் கவலைப்படவில்லையே! இவற்றையெல்லாம் பொறுமையுடன் நான் சகித்துக் கொள்வேன். ஆனால் என்னைத் தேடிவந்த அத்துறவி என்னிடம் ஒன்றும் பெறுமற் சென்றது என்னாற் பொறுக்கக்கூடியதா யில்லையே! என் செய்வேன்!" எனக் கூறிக் கண்ணீர் உகுத்தான் ராணா. இச்சமயத்தில்தான் சம்பாவதி சுந்தர்சிங்குடன் அங்கு தோன்றினள்.

குணவதி:—சம்பா! என்ன விசேஷம்? ஏன் இங்கு வந்தாய்?

சம்பாவதி:—அம்மா! நமது இல்லத்தை நாடிவந்த பிச்சைக்காரன் ஒருவன் ஏமாற்றத்தோடு செல்வது எனக்குத் துயரத்தைத் தருகிறது.

தன் கருத்துக்கேற்ப பேசிய தனது குமாரத்தியை நோக்கி ராணா, "சம்பா! உன்னால் அவனுக்கு உணவு அளிக்கக்கூடுமா?" என ஆவலோடு கேட்டான்.

"ஆம். அப்பா!" என மொழிந்து குடிசையைவிட்டு வெளியே சென்றாள்.

சிறிது நேரத்தில் சம்பாவதி இரண்டு ரொட்டித் துண்டுகளுடன் திரும்பினாள். ரொட்டிகளைக் கண்டதே ராணாவின் முகத்தில் வியப்பும், களிப்பும் தோன்றின. "சம்பா! இவைகள் உனக்கேது?" என்றான். அதற்கு அவள், "நேற்றிரவு எனக்குப் பசியில்லையாதலால் இவற்றை அப்படியே வைத்திருந்தேன்" என்று விடையளிக்கவே ராணா மலமலவென்று கண்ணீருகுத்தான். தன் மகளை அப்படியே ஆலிங்கனம் செய்துகொண்டு, "கண்ணே! உன்னைக் கடவுள் காப்பாராக!" என ஆசீர்வதித்தான்.

ஆனால் அவள் கூறியது உண்மையில் ஒரு முழுப் பொய்யாகும். முந்திய இரவில் தன் பெற்றோர்கள் உணவின்றி வாடுகையில் தான் மட்டும் புசிப்பது தகுதியன்று எனக் கருதியே அந்த ரொட்டித் துண்டுகளை வைத்திருந்தாள்.

கொஞ்ச நேரஞ் சென்றபிறகு அந்தப் பிச்சைக்காரன் மீண்டும் வந்தான். அதற்குள்ளாக நமது சிறுமி குடிசையின் ஒரு புறத்தைத் திருத்திச் சுத்தி செய்து ஓலைகளால் முடையப்பட்ட பாய் ஒன்றை விரித்து அதில் அவரை அமரும்படி வேண்டினாள். அப்போது அவ்வாண்டி, "குழந்தாய்! நீ யார்?" என வினவவும் அவள், "நான் மகாராணாவின் புதல்வி. தங்களைப் போன்ற துறவிகளுக்குத் தொண்டு செய்பவள்" என விடையளித்தாள். அதுகேட்ட அம்மறையவனது பார்வையில் பரிவும், வியப்பும் கலந்து தோன்றின. அவன் அவளாலளிக்கப்பட்ட ரொட்டித் துண்டுகளை உண்ணும்போது சம்பாவதி, "இவ்வுணவு தங்கள் உடம்புக்கு ஏற்குமோ என்னவோ! கால வித்தியாசத்தாலேற்பட்ட எங்களது எளிய வாழ்வில் தங்களுக்கு இத்தகைய உணவைக் கொடுக்க நேர்ந்தது குறித்து வருந்துகிறேன். தாங்கள் தயவுசெய்து என்னை மன்னிக்கும்படி வேண்டிக் கொள்ளுகிறேன்" எனப் பணிவுடன் இயம்பினாள்.

அதற்கு அத்துறவி, "பரவாயில்லை. குழந்தாய்! துறவிகளாகிய நாங்கள் வனவுணவுகளில் நன்கு பழகியுள்ளோம். என் போன்றவர்களுக்கு இதைக் காட்டிலும் மதுரமான ஆகாரம் வேறு என்ன வேண்டும்? எல்லாவற்றையும் துறந்தது உண்மையானால் ஒரு மனிதன் காய் கனிகளையும், கந்தமூலாதிகளையுமே உண்டு வாழவேண்டும். என்போன்ற துறவிகளெல்லாம் இச் சட்டத்தை யனுசரிக்க வேண்டுவது மிக அவசியமாகும். ஆதலால் இதற்காக நீ கவலைப்பட வேண்டியதில்லை. உன்னைக் கடவுள் காப்பாற்றுவாராக" என்றான்.

அவன் ஆகாரமுண்டு எழுந்து விடைபெற்றுக் கொண்டபோது நமது சம்பாவதியின் முகத்தில் களிப்பும், திருப்தியும் தாண்டவமாடின. ஆனால் அந்தோ பாபம்! அந்த ரொட்டித் துண்டுகள் இல்லாததால் இன்னுஞ் சில நிமிஷங்களில் தன் ஆவி பிரியப்போவதை அவள் உணர்ந்தாளில்லை.

சந்நியாசி மறைந்த பின்பு தன் பெற்றோர்களிடம் ஓடி அவரை உண்பித்து அனுப்பிய செய்தியைச் சொன்னாள். ஆனால் அடுத்த கணத்தில் மூர்ச்சித்துக் கீழே சாய்ந்தாள்; அதன்பின் அவள் எழவே யில்லை.

## 4

எங்கும் காரிருள் சூழ்ந்திருந்தது. காற்றும் பலமாய் வீசியபடி யிருந்தது. சம்பாவதி படுத்தபடியே மரணத்துடன் போராடிக் கொண்டிருந்தாள். அவளுக்கருகே ராணாவும், ராணியும் அவளது அந்திய காலத்தை- அந்தப் பயங்கர தருணத்தை மிகவும் துக்கத்துடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். அப்போது ராணா தன் மனைவியை நோக்கி மிக மெதுவான தொனியில், "என்ன பதில்தான் நாம் அக்பருக்குச் சொல்லி யனுப்புவது? நாம் படும் அவதிகளையும் நம் குழந்தைகள் பசியால் ஆவி துறப்பதையுங் கேட்டுச் சகியாது நம்முடன் சமாதானம் செய்துகொள்ள விரும்புகிறாராம். வார்த்தை பளவிலாவது நாம் ராஜ விசுவாசத்துடன் நடந்துகொள்ளுவதாகக் கூறிவிட்டால் போதுமாம். அப்படி நான் கூறிய மறுகணத்திலேயே நமது ராஜ்யத்தை நாம் முழுச் சுதந்தரத்துடன் ஆள அனுமதிப்பதாக உறுதி கூறுகிறார்........." என்று கவிலும்போது குடிசையின் வெளிப்புறத்தில் மனிதன் காலடி ஓசை கேட்கவே, அரசன் எழுந்தான்; "யார் அது?" என்று உரத்து வினவினான். பதில் இல்லை.

"அது ஒருவேளை காற்றினால் அசைவுறும் செடி கொடிகளின் ஓசையாயிருக்கலாம்" என ராணி மொழிந்தாள். அது கேட்ட ராணா, "எனக்கு அப்படித் தோன்றவில்லை. அக்பரிடமிருந்துவந்த தூதரா யிருக்கலாமென் றெண்ணுகிறேன்" என்றான்.

இவ் வார்த்தைகளைக் கேட்டதே சம்பாவதி மரணாவஸ்தையால் ஏற்பட்ட நடுங்கிய குரலில், "அப்பா! உங்களுடைய வம்சத்தாரின் பெருமைகளையெல்லாம் மறந்து போய்விடாதீர்கள். இன்று அந்த அக்பரின் அன்புப் பேச்சு உங்கள் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகிறது. நாளை அக்பரது மந்திரி பிரதானிகள் உங்களைச் சிறை செய்ய சூழ்ச்சி செய்வார்கள். அதற்கடுத்த நாள் அவர்களது சிறைச்சாலையில் நீங்கள் ஒரு அடிமைக் கைதியாகவிருக்க நேரிடும். நம் முன்னோர்கள் இரத்தம் சிந்தி வளர்த்த சுதந்தரமரத்தை வேரோடு வெட்டி வீழ்த்த உங்களுக்கு விருப்பமா? சமீபத்தில் நடந்த சண்டையைக் கொண்டே ராணாவின் குழந்தைகள் திறமை யற்றவர்கள் என்று அக்பர் எண்ணிவிட முடியாது. அப்பா! அக்பரிடம் ஆண்மைத் தனத்துடன் நடந்துகொள்ளுங்கள். அவருடைய வஞ்சகமான சிநேக பாவத்துக்கு இடங் கொடுக்காதீர்கள்......" எனச் சொல்லிக்கொண்டே வந்தவள் மூர்ச்சித்தாள்.

ராணாவின் உள்ளம் பூரித்தெழுந்தது. தன் மகளது விரிவுரையைக் கேட்டு மகிழ்ந்து, "குழந்தாய்! சம்பா! உனது மரணப் படுக்கையில் இவ்வுறுதி செய்கிறேன். எனது உடம்பில் ஆத்மா உள்ளவரையில் என் இராஜ்யத்துக்காக நான் யுத்தம் செய்வேன். ஏதோ உங்கள் (குழந்தைகள்) பாலுள்ள வாஞ்சையால் புத்தி தடுமாறி என்னென்னவோ கூறிவிட்டேன். இனி உனது விருப்பப்படியே நடப்பேன். இது சத்தியம்" என்றான்.

"ஆம். அப்படியே ஆகட்டும்" என்று வெளியிலிருந்து ஒரு குரல் வந்தது. ராணாவும், ராணியும் குடிசையின் வாயிலை நோக்கினர். பார்ப்பனத் துறவி உள்ளே வந்தார். "ராணா! நான்தான் அக்பர். உங்கள் தீரம், துன்பத்திலும் சகிப்புத் தன்மை, இவை யனைத்தையும்விட உனது வீர மகளின் தீரப்பேச்சு முதலான எல்லாம் என்னைப் பிரமிக்கச் செய்துவிட்டன. உங்களாலும், உங்கள் வம்சத்தாராலுமே நம் இந்தியாவிற்கு ஒரு மகத்தான பெருமை ஏற்பட்டது. உங்கள் வீரத்தையும், சுதந்தரதாகத்தையும், தேச சேவையையும் மெச்சுகிறேன். இன்று முதல் நடந்துபோனவற்றையெல்லாம் மறந்துவிடுங்கள். கடவுளின் சாட்சியாகக் கூறுகிறேன். இனி நங்கள் நண்பன் நான்" என்றார்.

அக்பரும், ராணாபிரதாபரும் கண்களில் நீர் துளிப்ப ஒருவரை யொருவர் ஆலிங்கனம் செய்துகொண்டனர். அதன் பிறகு அக்பர் விடைபெற்றுக் கொண்டு அவ்விடத்தை விட்டகன்றார். அதே சமயம் ஒரு பலத்த காற்று வீச குடிசையினுள் எரிந்துகொண் டிருந்த விளக்கு அவிந்தது. அத்துடன், நமது வீரப் பெண்மணி சம்பாவதியின் ஆத்மாவும் மறைந்தது. ஆனால், அவளுடைய ஆத்மாவின் அருளால் வெகுகாலம் வரை மொகலாய இராஜ்யத்தின் வீழ்ச்சிக்குப்பின்கூட இராஜபுத்திர ராஜ்யம் மீவார் நகரத்திலும், அதைச் சுற்றியுள்ள விடங்களிலும் சிறப்புற்றோங்கி யிருந்தது.

[ஒரு ஆங்கிலக் கட்டுரையின் மொழிபெயர்ப்பு.]

# குளிரை விளைவித்தல்

(த. பு. நவநீதகிருஷ்ணன், அண்ணாமலை சர்வகலாசாலை.)

வெப்ப நாட்டிலுறையும் நாம் தட்பத்தையே இன்பத்தின் அறிகுறியாகக் கொள்ளல் இயல்பேயாம். அவ் வகையான குளிரைப் பெறும் வகைகளை நாடுவதில் வியப்பொன்றுமில்லை. இதனாலேயே, பேரின்பத்தை "கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும் வகை கிடைத்த குளிர் தருவே, தரு நிழலே" யென்று இராமலிங்க சுவாமிகள் குறித்துள்ளார். அதில் கூறப்பட்ட வகையில் குளிரைப் பெறும் வகையைப் பற்றி அதிகமாய் விளக்கவேண்டியதில்லை. இம் முறையில் வெப்பம் படாது தடுப்பதால் தட்பத்தைப் பெறுகிறோம். சுவாமிகள் மேலும் பாடுவதாவது: "மேடையிலே வீசுகின்ற மெல்லிய பூங்காற்றே, மென்காற்றில் விளை சுகமே" என்ற அடிகளாம். காற்று வீசும்போது, நாம் எவ்வாறு குளிரைப் பெறுகிறோம் என்பதை விளக்கும் விஞ்ஞானியக் கருத்துக்கள் சிலவற்றைக் கருதலாம். இவற்றில், அடிப்படையான கருத்து, பொருள்கள் யாவும் மிக நுண்ணிய துகள்களாலானவை யெனக் கூறும் நுண்டுகள் கொள்கையேயாம் (Molecular Theory). அக் கொள்கை, எல்லாப் பொருள்களின் அடிப்படையான நுண்டுகள்கள், வேறுபட்ட கதிகளுடன், முன்னும் பின்னும் கீழும் மேலும் பல திக்குகளிலும் அப் பொருள்களினுள் திரிந்துகொண்டுள்ளன எனக் கூறுகின்றது. காற்றியல் (Gaseous) பொருள்களில், அவை அடைபட்டுள்ள கலங்கள் முழுமையிலும் அலைந்து திரிய இயலும். நீரியல் (Liquid) பொருள்களில் அவை அலைவதற்கோர் வரம்பு உண்டு. அவை வைக்கப்பட்டுள்ள கலங்களில் ஒரு குறித்த அளவு வரை மட்டுமே நிற்கும் இயல்பினை யுடையவை. திண்ணியல் (Solid) பொருள்களில் அவை எத் திக்கிலும் சிறிது தூரமே திரிய இயலும். ஆதலின் இப் பொருள்கள் குறித்த வடிவத்துடன் உள்ளன. ஆதலின் ஒரே வகையான அடிப்பொருள் சமயத்திற் கேற்றவாறு திண்ணியல் நிலைமையிலோ, நீரியல் நிலைமையிலோ, காற்றியல் நிலைமையிலோ இருக்கும். திண்ணியல் நிலைமையினின்று நீரியல் நிலைமைக்கு மாறும்போது ஒரு பொருளின் நுண்டுகள்களினிடையுள்ள தொலைவு அதிகரிக்கின்றது. தொலைவைப் பெருக்க அதற்கு ஆற்றல் அளிக்கப்படவேண்டும். ஆற்றலை (Energy) சூட்டினின்று பெறலாம். ஆதலின் சூட்டினுதவியால் திண்ணியல் பொருள்கள் நீரியல் பொருள்களாய் மாறுகின்றன. இவ்வாறே நீரியல் பொருள்களும் சூட்டினுதவியால் காற்றியல் பொருள்களாய் மாறுகின்றன. சூட்டை அகற்றுவதால், காற்றியல் பொருள்களை நீரியல் பொருள்களாயும், நீரியல் பொருள்களை திண்ணியல் பொருள்களாயும் மாற்றலாம்.

இனி, இக் கருத்தைக் கொண்டு, காற்று வீசுவதால் குளிர் எவ்வாறு ஏற்படுகின்றது என்பதற்குக் காரணம் கூறலாம். வெப்ப மிகுதியால் நம் முடலில் வியர்வை நீர் தோன்றுகின்றது. அப்பொழுது காற்று வீசுகின்றது. நீரிலுள்ள கதிமிக்க நுண்டுகளை அக் காற்று அடித்துக்கொண்டு செல்கின்றது. அப்பொழுது நீரியல் பொருள் ஆவியாய் மாறுகின்றது.

இம் மாற்றத்திற்குத் தேவையான சூடு நம் உடலினின்று பெறப்படுகின்றது. காற்று வீச வீச நம் உடலினின்று மேலும் மேலும் சூடு வெளிச் செல்கின்றது. ஆதலின் உடல் குளிர்ந்து, சுகத்தைப் பெறுகிறோம். இவ்ஙனம் ஆவியாக்கும் வழியே குளிர் விளைவிக்கலாம். இதை சோதனை முறையில் விளக்கிக் காட்டலாம். ஒரு சிறு பலகைத் துண்டின்மீது, சில

## "எலக்ட்ரொலக்ஸ்" பனிவிளைவி




பெ—பெட்டி
இ —இறுக்கி
ந —நவச்சார நீர்
ஆ —ஆவியாக்கி
நீ —நீரியம்
க —நீரியம்-நவச்சார ஆவி கலவை

சே—செறிந்த நவச்சாரக் கரையம்
உ —உட்கோள் கலம்
மி —நீர்மிக்க நவச்சாரக் கரையம்
அ —அழக்கம் மிக்க நவச்சார ஆவி
சூ —சூட்டுவாய்.

நீர்த் துளிகளை யூற்றி, அதன்மீது ஒரு கலத்தை வைத்து, அக்கலத்தினுள், எளிதில் ஆவியாம் இயல்புடைய ஈதர் (Ether) நீரை யூற்றுவோம். அவ்வீதரினூடே, ஒரு துருத்தி கொண்டு விரைவாய்க் காற்றடிக்கலாம். அப்போது ஈதர் நீர் ஆவியாய் மாறுகின்றது. இதற்கு வேண்டிய சூடு வெளியி

லுள்ள நீர்த் துளிகளினின்று கிடைக்கின்றது. எனவே, அந் நீர்த் துளிகளின் வெப்பநிலை (Temperature) குன்றி, இறுதியில் உறைபனி யெனும் திண்ணியல் பொருளாய் மாறுகின்றது. இம் முறையே, எலக்ட்ரோலக்ஸ் (Electrolux) என்ற 'பனிவிளைவி' (Refrigerator)க்கு அடிப்படையா யுள்ளது. 'பனிவிளைவி' யெனும் சாதனம், குளிர் விளைவிக்கும் இயந்திரம். 'எலக்ட்ரோ லக்ஸ்' பனிவிளைவியில், ஒரு புறத்தில் ஒரு சிறு பெட்டி யுண்டு. அப் பெட்டியின் உட்புறத்தில் குளிர் உண்டாக்குவதே அவ்வியந்திரம் ஆற்றும் பணியாம். அப் பெட்டியில் உணவுப் பொருள்கள், பழங்கள் இன்னோரன்னவற்றை வைத்தால், அவை நீண்ட காலத்தில் கூட கெடாவண்ணம் இருக்கும். சிறு கலங்களில் நீரை யூற்றி வைத்து, உறைபனி பெறலாம். இனிய நீர்களை குளிர்மை யாக்கலாம். மேற்கூறிய பெட்டியினுள் 'ஆவியாக்கி' (Evaporator) யென்ற சாதனம் உள்ளது. நவச்சார நீரும் (Liquid Ammonia) நீரியமும் (Hydrogen) சேர்ந்த கலவை அதனில் உள்ளது. இக் கருவியின் பல பகுதிகளிடை போக்குவரத்து இருக்கின்றது. ஆதலின் அது எங்கும் ஒரே அளவான அமுக்கத்துடன் (Pressure) உள்ளது. ஆவியாக்கியினுள் உள்ள அமுக்கம், நீரியத்தின் அமுக்கமும் நவச்சார ஆவியின் அமுக்கமும் சேர்ந்ததால் பெறப்படும். நவச்சார ஆவி ஒரு குறித்த வெப்பநிலையில் குறித்த அளவிற்கு அதிகப்பட்ட அமுக்கத்தைக் கொண்டிருக்க இயலாது. இவ்வளவு வரும்வரை, நவச்சார நீர் ஆவியாய் மாறிக்கொண்டிருக்கும். இங்கு ஆவியாக்கியில் நீரியமே அதிகமா யிருப்பதால், நவச்சார ஆவியின் அமுக்கம் மேற்குறித்த அளவிற்குக் குறைந்தே யிருக்கும். ஆதலின் நவச்சார நீர் மேலும் மேலும் ஆவியாய் மாறிக்கொண்டே யிருக்கும். இம் மாறுதல் ஏற்படுதற்கு அவசியமான சூடு ஆவியாக்கி வைக்கப்பட்டுள்ள அறையினின்று செல்வதால், அவ்வறையின் வெப்பநிலை குறையும்.

நவச்சார ஆவியும் நீரியமும் சேர்ந்த கலவை நீரியத்தைவிட அதிகமான நிறையானதால், அது ஆவியாக்கியின் அடிப்புறம் சென்று, அங்குள்ள குழாய் வழியே 'உட்கொள் கலம்' (Absorber) என்ற மற்றொரு கலத்தினுள் செல்லும். அக்கலத்தில் நீர் மிக்க நவச்சாரக் கரையம் (Dilute solution of ammonia) உள்ளது. நீரில் எளிதில் கரையும் இயல்புடைய நவச்சார ஆவி அதனுடன் கலக்கின்றது. நீரில் கரைய இயலாத நீரியம் ஆவியாக்கியை மீண்டும் அடைகின்றது. நவச்சாரம் மிக்க நவச்சாரக் கரையம் உட்கொள் கலத்தின் அடிப்புறத்தினின்று குழாய் வழியே ஒரு சுருள் குழாயினுள் செல்கின்றது. இச் சுருள் குழாயின் வெப்பநிலை, பனிவிளைவியை யோட்டும் மின்சார ஆற்றல் தக்க முறையில் மாற்றப்பட்ட சூட்டால் அதிகரிக்கப்படுகின்றது. ஆதலின் செறிந்த நவச்சாரக் கரையம் (Concentrated solution of Ammonia) நவச்சார ஆவி, நீராவி என்ற இரண்டும் சேர்ந்த கலவையாய் மாறுகின்றது. நீர் மிக்க நவச்சாரக் கரையம் சிறிது எஞ்சுகின்றது. அது உட்கொள் கலத்திற்கு மீண்டும் செல்கின்றது. நவச்சார ஆவி-நீராவி சேர்ந்த கலவை, 'இறக்கி' யென்ற சாதனத்துள் செல்கின்றது. 'இறக்கி'யில் ஆவி நீராகின்றது. ஆதலின், ஆவிகள் நீராய் மாறுவதால், நவச்சாரக் கரையம் பெறப்படுகின்றது. இது மற்றொரு 'இறக்கி'யினுள் செல்கின்றது. அதில் நீர் அகற்றப்படுகின்றது. நவச்சார

நீர் மீண்டும் ஆவியாக்கியைச் சென்றடைகின்றது. பின் மேற்கூறியவாறே சூட்டு ஓட்டம் நடைபெறுகின்றது. தொடர்ந்து மேலும் மேலும் அவ்வோட்டம் ஏற்படும்போது, ஆவியாக்கியுள்ள பெட்டியின் உட்புறத்தின் வெப்பநிலை படிப்படியாய்க் குறைகின்றது. அதில் குளிர் தோன்றுகின்றது.

'ப்ரிஜிடேர்' (Frigidaire) என்ற மற்றொரு வகையான பனிவிளைவியும் உபயோகத்தில் உள்ளது. இம் முறைக்கு அடிப்படையான கருத்து

"பிரிஜிடையா" பனிவிளைவி




அ - அமுக்கி
பெ - பெட்டி
தொ - தொட்டி
ஒ - ஒருவழிக்கதவு
பா - அடைப்பான்
கு - குளிர்
சூ - சூடு

பின்வருமாறும். ஓரிடத்தி லடைக்கப்பட்ட காற்றில் பெருக்கம் ஏற்பட்டால், அதன் நுண்டுகள்களிடையுள்ள தொலைவு அதிகரிக்கின்றது. இதற்கான ஆற்றல், அக் காற்றுள்ள இடத்தைச் சுற்றிலுமுள்ள இடத்தின் வெப்பநிலை குறைவதால் பெறப்படும் சூட்டின் மாற்றமேயாம். ஆதலின் அச் சுற்றிடங்களில் குளிர் தோன்றும். இனி, 'பிரிஜிடேர்' பனிவிளைவிகளின் அமைப்பைப் பற்றிக் கூறலாம். அதில், இரு சுருள் குழாய்கள் கீழ்ப் புறத்தில் ஒரு அடைப்பான் (Stopcock) வழியே இணைக்கப்பட்டுள்ளன. அவை, மேற்புறத்தில் ஒரு பெரும் குழலுடன் (Cylinder) இரு ஒரு வழிக் கதவுகள் (Valves) வழியே இணைக்கப்பட்டுள்ளன. அக் குழலில் ஒரு பீச்சான் (Piston) உள்ளது. இவ்வாறான குழலும் பீச்சானும் கொண்ட சாதனத்திற்கு 'அமுக்கி' என்று பெயர். ஒரு சுருள் குழாய் குளிராக்கப்பட வேண்

டிய பெட்டியினுள் உள்ளது; மற்றொன்று, மற்றொரு புறமுள்ள தொட்டியினுள் உள்ளது. இத் தொட்டி தண்ணீர்ப் பாய்ச்சலுள்ளது. குளிராக்கப் படவேண்டிய பெட்டியிலுள்ள சுருள் குழாயில், நமச்சார நீர், கரியீருயிரி நீர் (Carbonic acid), அல்லது கந்தக யீருயிரி நீர் (Sulphurous acid) உள்ளது. இத் திரவங்கள் ஆவியாய் மாறுதற்கு அதிக சூட்டை வேண்டுபவை. இவ்வாறான திரவங்களுக்கு 'பனியம்' (Refrigerant) என்று பெயர். அமுக்கியிலுள்ள பீச்சான்மேல் இழுக்கப்படுகின்றது. ஆதலின் குழலிலுள்ள ஆவியின் அமுக்கம் குறைகின்றது. இவ்வமுக்கம் அவ் வெப்ப நிலைக்குப் பொருத்தமான அமுக்கத்தைவிடக் குறைகின்றது. எனவே, அப் பக்கமுள்ள ஒரு வழிக் கதவு திறந்து, சுருள் குழாயிலுள்ள பனியத்தில் ஒரு பகுதி ஆவியாய் மாறி குழலினுள் செல்கின்றது. இம் மாறுதலுக்கு வேண்டிய சூட்டை, அது பெட்டியனின்று பெறுகின்றது. ஆதலின் பெட்டியின் வெப்பநிலை குறைந்து அதில் குளிர் விளைகின்றது. அதன்பின் பீச்சான் கீழே தள்ளப்படுகின்றது. அப்பொழுது ஆவியின் அமுக்கம் அதிகரிக்கின்றது பெட்டியின் பக்கமுள்ள ஒரு வழிக் கதவு அடைபட்டு விடுகின்றது. அமுக்கம் அதிகமான ஆவி தொட்டியின் பக்கமுள்ள ஒரு வழிக் கதவைத் திறந்துகொண்டு அப் பக்கமுள்ள சுருள் குழாயினுள் செல்கின்றது. தொட்டியில் தண்ணீர் ஓடிக்கொண்டேயிருப்பதால் அவ்வாவி திரவ நிலைமையை யடைகின்றது. பின் அடைப்பான் திறக்கப்பட்டு, பனியம் மீண்டும் பெட்டியிலுள்ள சுருள் குழாயுள் செல்கின்றன. இந் நிகழ்ச்சிகள் மீண்டும் மீண்டும் நடைபெறுகின்றன. பெட்டியின் வெப்பநிலை குறைந்துகொண்டே வருகின்றது. இவ்வாறு குளிர் விளைகின்றது. பீச்சானை மேலும் கீழும் தள்ளவும் அடைப்பானை அவ்வப்போது திறக்கவும் மூடவும், மின்சார இயக்கப் பொறி (Electric Motor) ஒன்று உதவுகின்றது. எனவே, மின்சார ஆற்றல் இயக்கவியல் ஆற்றல் சூடாய் மாறி அகற்றப்படுகின்றது. பெட்டியிலுள்ள சூடு தொட்டிக்குள் செல்கின்றது.

இவ்விரு முறைகளின்றி வேறு பல முறைகளாலும் குளிரைப் பெறலாம். மிகக் குளிரை விளைவிக்கும் வகைகளை விஞ்ஞானம் கண்டுபிடித்துள்ளது. அவற்றைப் பற்றி விரிக்கப் புகின், இக் கட்டுரை மிகவும் நீண்டுவிடுமென அஞ்சி, அவற்றை எடுத்துரைக்காது விடுத்தோம்.

பனிவிளைவிகளின் துணைகொண்டு, கோடையின் கடுமையால் ஏற்படும் தாகத்தைத் தணிக்கும் குளிர்ந்த நீர்கள் பலவற்றைப் பெறுகிறோம். கனிகளைக் குளிர்மையாக்கி உண்கிறோம். ஆயினும், இவ் வின்பங்களுக்கு அடிப்படையான கருவிகளை, வெப்பத்தைப் பேணும் குளிர் நாடுகளினின்று பெறுகிறோம். நம் வாழ்க்கையில் இன்பம் பெறவேண்டுவன யாவற்றையும் நமது நாட்டிலேயே உண்டாக்கிக்கொள்ளும் நற்பேறு நமக்கென்று கிட்டுமோ!

---



# கவியும் காதலும்

(ஜி. அழகிரிசாமி.)

குரு நாட்டுக்கும் அவந்திக்கும் நடக்கும் போர் உச்சநிலை அடைந்திருக்கும் சமயம். அவந்தி வேந்தன் அமரசிம்மனது மகன் குமாரசிம்மன் போர்க்களத்தில் எதிரிகள் வசம் அகப்பட்டு விட்டான். கடுமையான போரின் நிகழ்ச்சி ஒருபுறம். இன்னொரு புறமாக, குருநாட்டுப் படையின் ஒரு பகுதியினர் இரகசியமாய் எப்படியோ அவந்திமன்னன் அரண்மனைக்குள் புகுந்து விட்டனர். அவ்வீரர்கள் கொள்ளை யடித்து வந்த விலை மதிப்பற்ற பல பொருள்களிலும் விசேஷமான வைரக்கல் ஒன்றிருந்தது. அந்த வைரமணி குருநாட்டு ராஜகுமாரி பிரேமாதிக்கு அனுபவிக்கக் கிடைத்தது.

குமாரசிம்மன் குருநாட்டில் சிறையில் அடைக்கப்பட்டான். அவன் ஒரு பிறவிக்கவிஞன்; கலைப்பித்தன். கடமைக்காக போர்க்களத்தில் சேனைத்தலைமையை வகித்தானே ஒழிய, அவன் மனம் கனவிலும் அற்ப சண்டை சச்சரவை, விரோதபாவமுள்ள அபிப்பிராய பேதத்தைக் காணச் சகியாது. இப்பொழுது அந்த இளவரசன் கைதியாய் விட்டான். அதனால் தன் கௌரவத்திற்குப் பங்கமென்று அவன் கருதவில்லை. எப்படியும் தன் தாய்நாடு வெற்றி யடையவேண்டும் என்பதே அவன் நோக்கம். ஆனால் அவன் கவிதை யுள்ளத்தில் எழும் உணர்ச்சி அலைகளின் மோதலையும் இயற்கை யன்னையின் மேனிவனப்பை தன் நுண்ணிய கண்களால் அருவிக் காணும் பார்வையையும் தடுக்கும் சிறைக் கூடத்தின் சுவர் அவன் மனத்தை பாரக்கல்போல் அமுக்கிக் கொண்டிருந்தது. சிறைக்கதவின் கம்பிகள் வழியாகப் பார்த்தால் அரண்மனையின் மாடி தெரியும். அவன் புறக்கண்கள் வாசஞ் செய்யும் பிரதேசத்தின் எல்லை அதுதான். இனிமேல் சிறைக் கதவின் கம்பிகள் தாம் அவனுக்கு சோலை விருக்ஷங்கள்! கதவுகள் காற்றில் அசையும்போது ஏற்படும் குரூர ஒலியைக் குயில் பாட்டாகப் பாவித்துக் கொள்ள வேண்டியதுதான்.

அரசகுமாரனின் ஒரு மாத சிறைவாசம் கழிந்தது. இன்னும் போர் நின்றபாடில்லை.

ஒருநாள் மாலை, அரண்மனை மாடியின்மீது மஞ்சள் வெயில் அடித்துக் கொண்டிருந்தது. குமாரசிம்மன் தன்னை மறந்து ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தவனாய் அதைப் பார்த்துக் கொண்டிருந்தான். இன்றுதான் அவன் கண்கள் ஒரு இயற்கையின் சொரூபத்தைக் காணப்போகின்றன. மாடியில் பிரேமாதி அந்த மஞ்சள் வெயிலை வெல்லும் தன் மேனியின் பொன்னிறம் அழகு சிந்த, கண்களிக்கும் கோலத்தில் நடந்து சென்றாள். போகும்போது அவள் திரும்பிப் பார்க்கையில் குமாரசிம்மன் அவளுடைய வதன ஒளியை

யும் மனதைக் குளிர்விக்கும் கடைக்கண் நோக்கத்தையும் காண முடிந்தது. அவள் கூந்தலின் கருமையின் நடுவில் பிரகாசித்துக் கொண்டிருந்தது அவந்தி நாட்டு வைரமணி. அந்த மோஹனரூபி சிறிது நேரத்தில் அவன் காட்சியினின்றும் மறைந்தாள்.

இன்னும் கொஞ்ச நேரத்தில் இரவு வரும். அப்பொழுது வானத்தில் விண்மீன்கள் வெடித்தெழும். ஆனால் அவற்றிற்கு முன்னதாகவே கவிஞனது உள்ள வானில் கற்பனை நட்சத்திரங்கள் ஒன்றன்பின் ஒன்றாக வெகு வேகத்தில் வெடித்து ஒளி வீச ஆரம்பித்தன. அன்று அவன் கண்ட ஜீவனுக்கு பெண் என்ற பெயரோடு வேறொரு பெயரும் உண்டு. அதுதான் "இயற்கையின் உவமைப் பொருள்" என்பது. அதை இயற்கையென்றே அழைக்கக் கவிஞன் தீர்மானித்தான். அவள் கருங்கூந்தலின் சுருள்களிடையே மிளிரும் நீல ஒளி மேற்பரப்பில் உருகி வழிந்தது. அதன் நடுவில் ஒளி வீசிய அந்த வைரத்தை, நீலவானின் நடுவில் பிரகாசிக்கும் சூரியன் என்றால் பொருந்தாதா? அவள் கூந்தலில் சுருள்களால் ஏற்பட்ட மேடுபள்ளங்கள் மேக வரிசைகள் போலில்லை? அவளுடைய சரீரத்தின் கனகவர்ணத்தின் சோபையைவிட குமாரசிம்மனுக்கு பாலசூரியப் பிரகாசம் விசேஷமாகத் தெரியவில்லை. பகற்காட்சிக்குப் பிரதிநிதியாக அவள் தலைக்கோலம் விளங்கியது. முகத்தை சிறிதே திருப்பினாள். அவள் முகத்தில் ஒளி உமிழும் சந்திரகலை வீசியது. அவள் பசும்பட்டு தரித்திருந்தாள். குமாரசிம்மன் அவளிடத்தில் கால வேறுபாடுகளை, பசும்புல் வெளியை, வானத்தின் போழகை எல்லாவற்றையும் பார்த்து விட்டான். இவ்வழகியின் குரலும் கானமும் எவ்வாறிருக்குமோ என ஏங்கினான்

கைதி மாடியிற் சென்ற பெண்ணை யாரென்று ஒரு வேலைக்காரன் மூலம் அறிந்தான். அவன் மேலும், இரவில் நிலாமுற்றத்தி லிருந்து அவள் வீணை வாசிப்பது வழக்கம் என்றும் கூறினான். அவனால், கைதிக்குத்தான் விரும்பிய வண்ணம் எழுத்தாணியும் பனையோலையும் கிடைத்தன. அதில் தன் உள்ளத்தைச் சிந்தி எழுதினான். அதை அரசகுமாரியிடம் எப்படியாவது சேர்த்து வி வேண்டும் என்று என்று ஒரு வேலைக்காரனிடம் கொடுத்து வேண்டிக்கொண்டான்.

பஞ்சமளியில் படுத்திருக்கும் பிரேமாதி தன் கூந்தலிலிருந்து வைரக் கல்லை எடுத்துக் கையில் வைத்துத் திருப்பிப் பார்த்துக்கொண்டே களித்தாள். சிறிது நேரத்தில் அவளுடைய உள்ளத்திற்கு அந்த வைரம் அவளது கற்பனை வாயிலாக மௌனமாகவே ஒருகதை சொல்ல ஆரம்பித்தது.

“அவந்திநாட்டு வேந்தன் அமரசிம்மன் திருமணம் செய்துகொண்ட சிறிது நாட்களுக்குப் பிறகு அவனது பிறந்த தினக் கொண்டாட்டம் வந்தது. பற்பல நாட்டு மன்னர்களிடமிருந்து பல வகையான உயர்ந்த பரிசுகள் அவனுக்குக் கிடைத்தன. நான் (வைரம்) ஒரு அரசனால் மனமுவந்து கொடுக்கப்பட்ட பரிசு. மகிழ்ச்சியோடு அமரசிம்மனது செங்கோல் தாங்கும் கரங்களில் விளையாடினேன்.

“அன்று இரவு வந்தது. அரசன் தன் தேவியோடு சயனகிருஹத்தில் குலாவிக் களித்துக் கொண்டிருந்தான். தன் மனம் தெவிட்டும் வரைக்கும்

பெண்மையின் காதல் ரசத்தைப் பருகினுன். இயற்கையின் கட்டளைக்கு இருவர்களும் அடிமைகள் ஆனர்கள். சிறிதுநேரம் சென்றது. ராணியின் கூந்தலில் இருந்த மலர்களை எடுத்தெறிந்துவிட்டு, அரசன் தன்னுடைய கைகளால் என்னை அவள் தலையில் சூட்டினுன். அவள் தலையில் இல்லற தர்மத்தின் நடுவில் ஒளிரும் பதிவிரதை போன்றிருந்தேன்.

"ஒருநாள் என்னை அரண்மனை பொக்கிஷத்தில் மூடி வைத்தார்கள். அதைச் சிலர் முரட்டுத்தனமாய் உடைத்துவிட்டு என்னையும், பொன் ஆபரணங்களையும், சில முத்தாரங்களையும் எடுத்துக்கொண்டு வந்தார்கள். இப்பொழுது உன்னிடம் நான்..............

"அவந்தி மன்னனுக்கு சிற்றரசன், என் மூலம் தன் நட்பைத் தெரிவித்தான். பின் நான் காதலின் மேன்மையை உணர்ந்த ராணிக்குக் கொடுக்கப்பட்டேன். இப்பொழுது ராணியின் காதற்பொருள் பறிக்கப்பட்டது. அவள் படும் துன்பம் உனக்குத் தெரியுமா? உனக்கு எவ்வளவு கல்மனம். ராஜ குடும்பத்து ஜன்மங்களுக்கே மனிதக் கஷ்டத்தின் குரூரம் தெரியமாட்டேன் என்கிறது. சீ, நீங்களும் ஒரு பிறவி........"

கதை ஒரு தோழியின் பிரவேசத்தால் நின்றுவிட்டது. கதைக்கும் உண்மை நிகழ்ச்சிக்கும் சம்பந்த முண்டா இல்லையா என்பது நமக்குத் தெரியாது.

தோழி, "அம்மா, உங்களிடம் கொடுக்கும்படி ஒரு சேவகன் இதைக் கொடுத்தான்" என்று குமாரசிம்மன் எழுதிய கடிதத்தைக் கொடுத்தாள். அதில் கீழே காணும் பாட்டு எழுதப்பட்டிருந்தது.

"மாலை வெயில்படியும் மணிமாடம் மீதின்று
நீலக்கரும் கூந்தல் நெளிவால், கடைச்சுருளால்
என்னை மயக்கி, எதுமறியா நிலையால்
தன்னைமறந்து தவித்து பலவாய் உழலும்
உள்ளம் எனக்கீந்த ஒண்ணுதலோய்! யௌவனத்தின்
வெள்ளப் பெருக்கே! என்வேட்கை மிகுதியினை
துள்ளியெழும் கவியிற் சொல்லுவேன், சோலைகளில்
கள்சொறி பூச்சூடும் கமலமலர்க் கண்ணேய்! கேள்.
மதியின் ஒளிவீழும் மாடத்தே நீங்களெந்தன்
எதிரிருந்து இன்பவழ எழிலார் இதழ்விரித்து,
கவிஞன் மனமகத்தே கனிந்தூறும் சொல்ரசம்போல்
புவியோர் மனம்கவரும் பூங்குயில்கள் நாணமுற,
எந்தன் மனத்தின் இருளும் மறைந்தொழிய
சுந்தரச் சொல்லொன்று நீசொல்லுகையில் யான்கேட்க
பலகணமும் காத்திருப்பேன் பாவாய்! ஒருமொழியும்

சொலகாணும் பேதையர்நீர்; சொல்லுவதால் குற்றமில்லை
ஆசைநிறை வேருதென் ஆருயிரே மாய்வதினும்,
பேசிடைந்தன் காணில் பிழைத்தாற் பழியுமுண்டோ ?"

கன்னியின் குரலை, வார்த்தையைக் கேட்கக் கவிஞனுக்குத் தாகமாய் விட்டது.

அரசகுமாரியின் உள்ளத்தில் பற்பல அர்த்தமற்ற உணர்ச்சிகளின் வேகம், படபடப்பு, அவளுக்கும் கவிதை யுள்ளமுண்டு. இருவருடைய உள்ளங்களும் ஒன்ருேடொன்று தழுவ ஆரம்பித்தன. ஏன்? மறுநாள் இருவருந்தான். இது வரைக்கும் அரசகுமாரி கைதியைப் பார்க்கவும் இல்லை.

அன்றிரவே கைதியைச் சந்தித்தாள். அப்பொழுது என்ன நடந்த தென்பதைத் தெரிவிக்கவும் இயலுமோ? காதல் சம்பாஷணையை ஒருவன் வாயிலாக அறிவதைக் காட்டிலும் ஊகித்துக்கொள்வது எவ்வளவு மேன்மை!

யுத்தம் சமாதானத்தில் முடிந்தது. சமாதான நிபந்தனைகளில் நாம் அறியவேண்டியது இவை தாம். "அவந்தியில் கொள்ளை யடித்த பொருள்கள் திருப்பிக் கொடுக்கப்படவேண்டும். அவந்தி இளவரசன் குமார சிம்மனுக்கு குருநாட்டு ராஜகுமாரி பிரேமாதியை இரு வேந்தர்களின் கட்பிற்கறிகுறியாய் மணம் முடித்துக்கொடுப்பது." பழையபடி தனது நாட்டுக்கே வைரக்கல் போய்ச்சேர்ந்தது.

திருமண நாள். சடங்குகள் எல்லாம் முடியும் சமயம், அவந்திராணி தன் மருகி பிரேம ரதி தலையில் வைரத்தைச் சூட்டினள். ராணி தன் நாயகனேடு அனுபவித்த காதல் மாயும்போது, உலகத்தில் அந்த இடத்தை நிரம்ப அவ்விரு யௌவன சொரூபங்களும் காத்திருந்தன போலும்.



# கோபம் ஆகாது

(க. சிதம்பரம் பிள்ளை)

மனிதனுடைய உள்ளத்தின் கிளர்ச்சிகள் பலவகைப்படும். ஆனால், அக்கிளர்ச்சிகளை தண்மை வெம்மை என்னும் இரண்டு முக்கிய பிரிவுகளாகப் பிரிக்கலாம். மனதின் தண்மை நிலையில் பிறப்பவை அன்பு, தயை, பொறுமை, பணிவு, நட்பு முதலிய நற்குணங்கள். அதன் வெம்மை நிலையிற் பிறப்பவை கோபம், அகங்காரம், பொறாமை, பகைமை முதலிய தீக்குணங்கள்.

வெம்மை நிலையிற் பிறக்கும் தீக்குணங்கள் எல்லாவற்றுள்ளும் மிகக் கொடியது கோபம். மனிதனைத் திடீரென ஆபத்திற் கொண்டுபோய் வீழ்த்தி விடுவதில் கோபத்தைப்போல் கொடியது வேறொன்று இல்லை.

'நாமெவ்வளவு, அவன் எவ்வளவு? நம்மைச் சிறிதும் மதியாமல் அவமதித்துப் பேசவல்லவா செய்துவிட்டான்' என்று மனம் மட்டும் நினைத்து விட்டாற் போதும். வந்துவிட்டது கோபம்! கோபத்தைக் கண்டவுடனே, முன்பின் எண்ணிப் பார்க்கும் பகுத்தறிவும் ஒளிந்து கொள்கிறது. கோப வெறியில் எதை எதையோ செய்துவிடுகிறான். பின் அது காரணமாக என்னென்னவோ தொந்தரவுகளெல்லாம் நேரிட்டு விடுகின்றன!

ஏன்? நம்மை ஒரு பொருட்டாக மதிப்பவர்களும் இருக்கட்டும்; மதியாமல் இழிவாக எண்ணக்கூடியவர்களும் இருக்கட்டுமே. மதிக்கவில்லையே என்று அவர்மேல் கோபத்தைச் செலுத்தி, பின் அவர்களும் தாமும் என் ஒன்றுபோல் அவஸ்தையை அடையவேண்டும்!

அசங்கியப் பொருள்களை மொய்க்கக்கூடிய கேவலம் ஈயும்கூட வல்லவா நமது தலைமேல் ஏறி உட்கார்ந்துகொள்கிறது. அதற்காக அந்த ஈயைக் கோபிக்கிறோமா? இதை எண்ணிப் பார்த்தால் தம்மை இகழும் அறிவில்லாதார்மேல் கோபங் கொள்ளுதல் முறையாகுமா?

"மதித்திறப் பாரும் இறக்க; மதியா
மிதித்திறப் பாரும் இறக்க,—மிதித்தேறி
ஈயும் தலைமேல் இருத்தலால் அஃதறிவார்
காயும் கதம்இன்மை நன்று"

[இறக்க=நடக்கட்டும்—அதாவது இருந்துகொண் டிருக்கட்டும். கதம்=கோபம்.]

மனிதன் காத்துக்கொள்ள வேண்டிய செய்கைகள் பலவற்றுள்ளும் மிக முக்கியம் நாவைக் காத்துக் கொள்வதுதான். அறிவில்லாத ஒருவன் அப்படி நாவைக் காத்துக் கொள்ளாமல் நம்மை வைதுவிடுகிறான் என்று வைத்துக்கொள்வோம். அப்போது நம் மனதுக்கு அது எப்படி இருக்கும்? மிக வருத்தமாக இருக்குமல்லவா? அப்படித்தானே நாம் ஒருவனைக்

கோபித்து வையும்போது அவனுக்கும் இருக்கும். இதை மட்டும் நினைத்துப் பார்த்தால் ஒருவனுக்குக் கோபம் வரலாமா ?

"காவா(து) ஒருவன்தன் வாய்திறந்து சொல்லும்சொல்
ஓவாதே தன்னைச் சுடுதலால்,—ஓவாதே
ஆய்ந்தமைந்த கேள்வி அறிவுடையார் எஞ்ஞான்றும்
காய்ந்தமைந்த சொல்லார் கறுத்து"

[ஓவாது=நீங்காமல், கறுத்து=கோபித்து]

நாம் ஒருவனைக் கோபித்தால் அதனால் நமக்கு ஏதேனும் துன்பம் வரும் என்றிருந்தால்தானே கோபிக்கக்கூடாது ? எது வந்தாலும் சமாளிக்கக்கூடிய நிலைமை நமக்கிருக்கும்போது, பிறனொருவன்மீது கோபங் கொண்டால் என்ன ?

அப்படியல்ல; இன்னொருவன்மேல் கோபத்தைச் செலுத்தத்தக்க வலிமை இல்லாதவர் கோபத்தை அடக்கிக்கொள்வதில் வியப்பு என்ன இருக்கிறது? அவ்வித வலிமையுள்ளவர் அக்கோபத்தை அடக்கிக்கொள்வதுதான் பெருமை.

வயது முதிர்ந்த கிழவனொருவன் 'சிற்றின்ப ஆசையை வெறுத்துவிட்டேன்' என்று சொல்வதிலும், பணக்காரனொருவன் 'தருமத்துக்காகப் பொருளுதவி செய்தேன்' என்று சொல்வதிலும் ஆச்சரியம் என்ன இருக்கிறது? காம இச்சையை அனுபவித்து மகிழும் பருவத்தையுடைய வாலிபனொருவன் அவ் ஆசையை அடக்கி வைப்பதும், ஏழை ஒருவன் தனது சிறிய வருவாயில் ஒரு பகுதியை தருமத்திற் செலவிடுவதுமல்லவோ சிறப்பு.

"இளையான் அடக்கம் அடக்கம்; கிளைபொருள்
இல்லான் கொடையே கொடைப்பயன்;—எல்லாம்
ஒறுக்கும் மதுகை உரனுடை யாளன்
பொறுக்கும் பொறையே பொறை"

[கிளைபொருள்=பெருகக்கூடிய திரவியம், கொடை=தருமம், ஒறுக்கும்=அழிக்கவல்ல, மதுகை உரன்=மிக்க வலிமை]

'கோபம் என்பது மனதின் ஒருவகைக் கிளர்ச்சிதானே. மனிதனுடைய வாழ்வில் பல சம்பவங்களும் சேரும்போது ஒருவேளை அக்கோபம் வரும்படியான செயல்கள் ஏற்பட்டுவிட மாட்டாவா?' என்கலாம்.

உண்மையே; ஆனால், அந்த வகையில் கோபங்கொள்ள நேர்ந்துவிடும் பட்சத்திலும் உள்ளம் தூய்மையடைந்த * அறிவாளிகளாக இருந்தால், அவர்களுடைய அக்கோபமானது, தண்ணீரைக் காய்ச்சும்போது மட்டும் அது சூடாகி, பின் எப்படி அச்சூடு தானே தணிந்து கொள்கிறதோ அது போல், வேறொருவர் ஆற்றுமலே தானே தணிந்துவிடும்.

அறிவில்லாத கீழோர்களுக்கு வரும் கோபம் அப்படியல்ல. பல நாள் நீடித்து நின்று, எவர் தணித்தாலும் தணியாமல், அதற்குக் காரணமாயிருந்தவர்களை சமயம் வாய்க்கும்போதெல்லாம் அது தொந்தரவுகள் செய்துகொண்டே இருக்கும்.

"நெடுங்காலம் ஓடினும் நீசர் வெகுளி
கெடுங்காலம் இன்றிப் பரக்கும்;—அடுங்காலை
நீர்கொண்ட வெப்பம்போல்தானே தணியுமே,
சீர்கொண்ட சான்றோர் சினம்"

[நெடுங்காலம் ஓடினும்=வெகுநாள் சென்றாலும், வெகுளி=கோபம், பரக்கும்=பின்னும் அதிகரிக்கும், அடுங்காலை=காய்ச்சும்போது]

கோபம் வந்தகாலத்தில் மட்டுமல்ல, சாதாரண காலத்தில்கூட அசங்கியமான சொற்களை பேச்சுக்கு இடையில் உபயோகிப்பது சிலருடைய குணம். ஆனால், எந்தக் காலத்திலும் மேன்மக்களுடைய வாயிலிருந்து அப்பேர்ப்பட்ட சொற்கள் வரவேகூடாது. அப்படி வாவிடுவது மேலோர்களுக்கு அழகல்ல.

'வைதவனைத் திருப்பி வைவதில் தப்பு என்ன இருக்கிறது?' என்கலாம். கடித்த நாயைத் திருப்பிக் கடித்தவர்கள் உண்டா? வைதவனைத் திருப்பி வைவது கடித்த நாயைத் திருப்பிக் கடிப்பதுபோலத்தான்.

"கூர்த்துநாய் கௌவிக் கொளக்கண்டும் தம்வாயால்
பேர்த்துநாய் கௌவினார் ஈங்கில்லை;-நீர்த்தன்றிக்,
கீழ்மக்கள் கீழாய சொல்லியக்கால் சொல்பவோ
மேன்மக்கள் தம்வாயால் மீட்டு?"

[கூர்த்து=கோபங்கொண்டு, பேர்த்து=திருப்பி, நீர்த்தி அன்றி=நல்ல சொற்களைப் பேசாமல்.]

---

* உள்ளம் தூய்மை அடைவது எப்படி? மனம் என்பது என்ன? மனதுக்கும் உயிருக்கும் உடம்புக்கும் உள்ள தொடர்பு என்ன? என்பனவற்றை "மனிதனும் கடமைகளும்" என்னும் புத்தகத்தில் விளக்கமாகக் காணலாம். கிடைக்குமிடம்:—"ஆனந்தபோதினி" ஆபீஸ், விலை ரூ. 1.





# பொங்கலோ பொங்கல்!

(தி. முத்துராம கிருஷ்ணன்.)

ஒவ்வொரு வருடமும் தை மாதம் முதல் தேதி தமிழ்நாடெங்கும் சங்கராந்தி பண்டிகை வெகு விமரிசையாக கொண்டாடப்படுகிறது. இதன் காரணத்தை நாம் இன்னும் பூர்ணமாக அறியாதவர்களாக காணப்படுகிறோம்.

இம் மண்ணுலகம் ஆண்டவனால் படைக்கப்பட்டது என்று நாம் எல்லோரும் நம்புகிறோம். ஆனால் விஞ்ஞான நூலின்படி வெகு காலத்துக்கு முன் ஏதோ ஒரு சமயத்தில் சூரியனிடமிருந்து ஒரு சிறுபாகம் விலகிப் பல தனி யுருவங்களாக பிரிந்தது என்றும், அவ்வுருவங்களே பூமியும் மற்ற கிரகங்களும் என்று தெரிய வருகிறது. ஆகவே பூமி சூரியனிட மிருந்து பிரிந்த காலத்தில் அதன் உள்ளும் புறமும் மிகவும் உயர்ந்த உஷ்ணநிலையில் இருந் திருக்கவேண்டும். வெளிப்பாகமானது உஷ்ண நிலையில் குறைந்து கொண்டே வருகிறது. உள்பாகமானது உஷ்ணநிலையில் மிகவும் நிதானமாகவே குறைகிறது. ஏனென்றால், அதன் உள்புறத்திலுள்ள உஷ்ணம் வெளியேறி பின் பூமியிலிருந்து வெளிப்படுகிறது. ஆகவே, பூமியின் உஷ்ணம் இயற்கையல்ல. அது சூரியனிடமிருந்தே பெறப் பட்டது. இவ்வாறு கெல்வின் பிரபு ஒரு இடத்தில் பூமியின் வயதைப்பற்றி விவரிக்கையில் சொல்கிறார்.

ஆகவே, உலகில் சகல ஜீவகோடிகளும் உயிர் வாழ்வதற்கு ஆதவன் அருள் அவசியம் வேண்டி யிருக்கிறது. அதுபற்றியே அவனை தியானம் செய்யவேண்டியது நம் கடமையாகிறது.

சூரியபகவான் வருஷத்தில் இரண்டு யாத்திரை செல்கிறார். முதல் யாத்திரை வடக்கிலிருந்து 6 மாத காலம் பின் தெற்கிலிருந்து 6 மாத காலம். வடக்கிலிருந்து தெற்கே வருவதற்கு தக்ஷிணாயனம் என்றும் தெற்கிலிருந்து வடக்கே வருவதற்கு உத்திராயணம் என்றும் சொல்கிறார்கள். இப்பொழுது தைத்திங்களில் உத்திராயணம் ஆரம்பமாகிறது. திருவாதிரை முடிந்து, தை நீராடல் ஆரம்பமாகிறது. சூரியனிருக்கும் தூரத்துக்கும் இரண்டரைகோடி மைல்கள் தூரத்தில் ஆதிரை இருப்பதனால் தான் திருவாதிரையை முதலில் வைத்து திருப்பள்ளி யெழுச்சி நடக்கிறது. இப்பேர்ப்பட்ட புனிதமான தினத்தை ஆண்களும் பெண்களுமல்ல மற்றும் மிருகங்களும் கூட, அன்று ஆனந்தமாக சங்கராந்தியை கொண்டாடுகிறார்கள் என்றால் அதைப்பற்றி பின் என் சொல்வது?

தைப்பொங்க லென்றால் தமிழ்நாட்டில் ஒரே குதூகலம்தான். ஏனென்றால் பொங்கலுக்கு வெள்ளை அடியாத வீட்டை நாம் பார்க்க முடியாது. அது மாத்திரமல்ல;ஒவ்வொரு வீட்டிலுமுள்ள சகல சாமான்களையும் நீராடி கொணர்வார்கள். கடுகுபோலுள்ள சாமானும் அன்று தப்ப முடியாது.

சீராடியே தீரவேண்டும். வாய் பேச முடியாத அவைகளும் பொங்கலுக்
காக சுத்தம் செய்து கொள்ளுகின்றன போலும். அவ்வளவு பரிசுத்தமாக
இருக்கும் நம் குடிசைகள் அன்று சரஸ்வதி வெள்ளை கலையுடுத்தி வெள்ளைப்
பணிபூண்டு வெள்ளைக் கமலத்தே வீற்றிருப்பாள். குட்டிச்சுவர்போல்
கிடந்த குடிசையும் பொங்கலன்று காவி வஸ்திரங்களுடன் தாண்டவமாடு
வாள் என்றால் பின் ஏன் அங்கு தர்மதேவதைகள் வராம லிருப்பார்கள்.
பொங்கல் வருகிறதென்றால் எல்லோருக்கும் ஆனந்தம்தான். அதனால் எத்
தனை பேர் வெள்ளை யடித்து பிழைக்கிறார்கள். மிஞ்சினால் ஒரு மாதம்
வெள்ளை யடிப்பார்கள். ஆனால், அடேயப்பா! அன்று என்ன பூரிப்பு.
பொங்கலன்று ஏனைய தொழிலாளருடன் அவர்களும் அன்று சீட்டாட்டம்
தான். ஆனால் ஒரே ஒருவர் பாடு திண்டாட்டம். அவர் பொங்கல் வரு
கிறதென்றால் உடனே மூட்டையைக் கட்டிக்கொண்டு டிக்கட் எடுக்க ஆரம்
பித்து விடுகிறார். யார்? எங்கே? மூட்டை வாள்தான். சாக்ஷாத் சொர்க்க
லோகத்துக்கு. பாவம்; அன்று அதன்பாடு அதோ கதிதான். ஆம், அதற்கு
வேண்டியது தான். வருஷம் 365 நாட்களும் மனிதர்களை வேலை செய்ய
விடாமல் தூணிலும், துரும்பிலும், பொந்திலும் இருந்துகொண்டு பண்
ணின அட்டகாசத்திற்கு வெகுமதி பெறவேண்டியது அவர்கள் கடமை
தானே.

வெள்ளை மாத்திரம்தானா வீட்டை சுத்தம் பண்ணுகிறது? அன்று
அம்மணிகள் வீட்டை சாணத்தால் மெழுகி, கோலத்தால் விதவிதமான
கோலங்கள்; அட அடா, பொட்டுக் கோலங்களென்ன கம்பிக் கோலங்க
ளென்ன, காவிப் பட்டைகளென்ன! அதிலும் பெண்கள் ஒருவர்க்கு ஒருவர்
போட்டி யிட்டுக்கொண்டு மிக மிக அழகாக வீட்டை வர்ணத்தில் தீட்டி
விடுகிறார்கள். அன்று உதயன் ஒளி வீசுகிறது என்றால் மிகையாகாது.

அன்று பழைய மண்பானைகளெல்லாம் தெருவில் கூட்டம் கூட்டமாக
சஞ்சரிப்பார்கள். மண்பானைகளை அன்று யாரும் மறைக்க முடியாது.
ஏன்? அன்று விடியற்காலையிலே தோட்டிகளின் குதூகலத்தைச் சொல்லி
முடியாது. அவர்கள் ஒரே கூப்பாடு போட ஆரம்பித்து விடுவார்கள். 'ஓ!
அம்மாமாருங்கோ, பழையசட்டி பானைகளைப் போடுங்க. போடுங்கம்மா
போடுங்க என்று தெரு தெருவாகச் சொல்லி நம்மைத் தூங்கவிட மாட்டார்
கள். ஏனென்றால் மறுநாள் விடியற்காலையில் பல பலவென்று விடியும்
பொழுது தெருவில் ஒரு அசுத்தம் கூட தென்படக் கூடாதல்லவா. ஆகவே
அவர்கள் கடமையை நிறைவேற்றுவதில் அவ்வளவு ஆனந்தம் அவர்களுக்கு.

இவ்வளவுதான் பொங்கல் விசேஷமென்று எண்ணி விடாதீர்கள்.
இனிமேல் வரப்போகிறதுதான் ரொம்ப ரொம்ப ருசிகரமான விஷயம்.
அதுதானா, தெரியவில்லையா? ஆண்டவனுக்கு படைக்கவேண்டிய அமுது.
ஆம், அன்று கரும்புகளென்ன, மஞ்சள் குலைகளென்ன, பழங்களென்ன! காய்
கறிகளென்ன, வள்ளிக்கிழங்குகளென்ன, பனங்கிழங்குகளென்ன மற்றும்
இவைகளுக்கு மத்தியில் நிறைநாழி அதாவது ஒரு படி நெல் அவைகள்
மத்தியில் வீற்றிருக்கும். இவைகளே அன்று ஆண்டவன் உண்ணுகிறார்
போலும்.

வறுமை தாண்டவமாடும் இக்காலத்திலும், பொருளை உறஞ்சுகின்ற இக்காலத்திலும்கூட நம் உற்சாகத்திற்கு அன்று குறைவேது? எங்கிருந்தாவது ஒரு கரும்பு, ஒரு மஞ்சள் குலை, ஒரு பனங்கிழங்கு மற்றும் தேங்காய் பழம் வந்துவிடாதா என்ன. ஆண்டவனுக்குத்தானே. ஆகவே அவன்படி அளக்கத்தானே செய்யவேண்டும்.

இவ்வளவு வேலைப்பாடமைந்த குடிசையில் அன்று விடியற்காலையில் காகம் கரைகிறது. எங்கே என்றால் உச்சாணி ஓட்டின்மேல். 'கொலை' விடும் சப்தம் கேட்டதும் காகங்களுக்குண்டான உற்சாகத்திற்கு குறையேது. விருந்தாளிகளை ஒரே கூட்டமாக அழைத்துக்கொண்டு வீடு வீடாய்ச் செல்லுவார்கள். நம்மைப் போலல்ல, அன்று ஒரு காகம் தனியாக வருவதை நாம் பார்க்க முடியாது. எச்சிற்கையால் காக்காய் ஓட்டாதவன் கூட அன்று கா, கா என்று அழைத்துக்கொண்டு அன்னமிடுவான்.

தைப் பொங்கல் நாள் கழிந்ததும் மாட்டுப்பொங்கல் வருகிறது. மாடுகளுக்குக்கூட அன்று ஓய்வுநாள் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன் அன்றைய நாளின் பெருமையை. மாடுகளை, துணி மணிகளைக்கொண்டு அலங்காரம் செய்து கரும்பு கிழங்குகளை மாலைபோல் கட்டி விரட்டுவார்கள், அசல் 'சல்லிக்கட்டு' மாதிரி. முற்காலத்தில் பணத்தைக் கட்டி விரட்டுவார்களாம். இப்பொழுது கட்ட பணமேது?

இவ்வளவு உற்சாகத்தினிடையே கரிநாள் பிறக்கிறது. ஆம், அன்று ஒருவரும் வேலையைத் தொடங்க மாட்டார்கள். பரிபூர்ணமான ஓய்வெடுத்துக் கொள்வார்கள்.

முழுமுதற் கடவுளான ஆதவனை இவ்வாறு வழிபடுவதையே சங்கராந்திப் பண்டிகையென்றும், தைப் பொங்கலென்றும் அழைக்கிறோம்.

பொங்கலோ பொங்கல்! அருள் பொங்குக!! அமுது பொங்குக!!! இன்பப்பால் பொங்குக!!!

என்ன. 'பால் பொங்குச்சா, வயிறு வீங்குச்சா' என்று நாம் மறுநாள் குதூகல மாடுவதுதான் என்னே! வருஷத்தில் எந்த திருநாளிலாவது இவ்வாறு ஒருவருக்கொருவர் குதூகல மாடுவதும், ஆனந்தம் கொண்டாடுவதும் உண்டா! இல்லையே!

பொங்கலோ பொங்கல்!

இங்கு மங்கென்றும் இறை வளருளால்,
பொங்கல் நான்பல பொலிந்தோங்குகவே!

---

# இங்கிதமாலையின் எழில்

(முருகவடிவு)

திருவருட்பிரகாச வள்ளலார் அருளிச் செய்த திருவருட்பா, ஊனுருகி உயிருருகி இன்ப ஊற்றெடுக்கும் தெய்வீகத் திருநூலாகத் திகழ்கின்றது. அத்திருவருட்பாவின் கண்ணே இங்கிதமாலை என்னும் எழில் மிகுந்த பகுதி ஒன்றுளது. இவை பெரும்பாலும் அகத்திணைப் பாடல்களை யொத்து மிளிர்கின்றன. அகம் என்பது ஒத்த அன்பினராகிய தலைவன் தலைவி என்ற இவ்விருவர் அகத்தும் நிகழ்வுற்று அவராலே அநுபவிக்கப்படும் இன்பமாம். திணை என்பது ஈண்டு ஒழுக்கம். ஆகவே இன்பமாகிய ஒழுக்கத்தைப் பற்றிய பாடல்கள் அகத்திணைப் பாடல்கள் என்பது போதரும்.

அகத்திணைப் பாடல்கள் ஊடுதல் கூடுதல் பிரிதல் முதலியவற்றால் இன்ப துன்பங்களைக் கூறுதல் போன்றே, இவையும் உள்ளத்திற் பிறக்கும் உணர்ச்சிகளை வெளிப்படுத்துவனவாய் விளங்குகின்றன. இவ் விங்கிதமாலையில் உள்ள பாடல்களைப் பயில்வார் அடிகளாரது அன்பின் பெருக்கத்தையும், பெருங் கருணைத் திறத்தையும், போற்றலையும் வியவாதிருக்க முடியாது. செவ்விய மதுரஞ் செறிந்த சொற்கள் பல பொருந்தப்பெற்று விழுமிய பொருள்கள் பல தொனிக்கின்றன. மற்றும் உயிருக்கும் இறைவனுக்கும் உள்ள இயைபை இவை காதலி காதலன் என்ற முறையிற் கூறுகின்றன.

அருட்பிரகாச வள்ளலார் தன்னைத் தலைவியாகவும், கடவுளைத் தலைவனாகவும் கொண்டு சிலேடை விளங்க அகப்பொருள் துறையாக இவ் விங்கிதமாலைச் செய்யுட்களைப் பாடியுள்ளார். இம்முறை தூது முதலிய பிரபந்தங்களிலும், நாயன்மார்களது தேவாரத்திலும், நம்மாழ்வாரது திருவாய்மொழியிலும் மற்றைய சமய நூல்களிலும் அமைந்து விளங்குகின்றது.

சுவை என்பதே இன்னதென அறியாதவனுக்கு அமுதத்தின் அருமை பெருமைகளை எடுத்துரைத்தல் எவ்விதம் இயலாததோ; அவ்விதமே இன்பம் என்பதே இன்னதென அறியாத ஒருவனுக்கு பேரின்பத்தின் அருமையையும் பெருமையையும் விளக்கிக் கூறுவதாகும். பேரின்பத்தின் அருமையையும், பெருமையையும், செம்மையையும் மக்கள் அறிந்து தெளிந்து, அப்பேரின்ப வாழ்வை யடைய ஆர்வம் கொள்ளுதற் பொருட்டு சிற்றின்பத் துறை மூலமாக அடிகளார் எடுத்துரைத்திருக்கிறார். இவர் எடுத்துரைக்கும் தன்மையினால் பேரின்பத்தில் படிந்த மனமுடையாராய்த் திகழ்ந்தார் என்பது ஒருதலை.

இவ்வுண்மையை உணர்ந்தே இறைவன்பால் ஈடுபட்டு பத்திமையால் பணிந்து பாமாலை பாடி நற்றமிழ் பரப்பிய பெரியார் பலரும்; கடவுளையும் உயிரையும் காதலன் காதலி என்னும் முறையில் அகத்திணை யழகுகள் ஒருங்கே விளங்க எடுத்துரைப்பாராயினர். இத்தன்மை மணிவாசகர் திருவாசகத்திலும் அமைந்து விளங்குகின்றது. ஆசிரியர் திருவள்ளுவ நாயனாரும் தமது தமிழ் மறையில் இன்பப் பாலை (காமத்துப்பாலை) அமைத்தருளியது எற்றுக்கோவெனின், இன்ப இயல் இறுதியில் "சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத்தாய" வீடுபேறு பயக்கும் என்பதாலன்றோ!

இனி, இங்கிதமாலை என்பதற்கு அடிகளே அருட்பாவின்கண் பொருள் கூறியுள்ளார்கள். அதாவது,

ஆன்ம சிற்சத்தியாகிய தலைவி கடவுளாகிய தலைவரோடு சயிக்ஞை புரிந்த ஐக்யானுபவ சையோக விவகாரத்தைப் பராசத்தியராகிய உயிர்ப்பாங்கியரிடத்து வினவிய தலைவி பாங்கிக்குரைத்தல்" என்பர்.

பொதுவாக இங்கிதம் என்பதற்கு குறிப்பு என்பது பொருளாகும். "உற்ற நோய்நீக்கி யுறாஅமை முற்காக்கும் பெற்றியார்ப் பேணிக் கொளல்" என்னும் திருக்குறளுக்கு உரை கூறப்போந்த பரிமேலழகர் "இங்கிதம், குறிப்பால் நிகழும் உறுப்பின்றொழில்" என்றார். இங்கே இங்கித மென்றது; பிறைமுடிப் பெம்மானாகிய இறைவன் பிச்சாடன வேடம் பூண்டு தாருகா வனத்திலிருந்த முனிவர் பத்தினிகளின் கர்வத்தை அடக்க வந்த காலை; அம்மங்கையர் அனைவரும் மையல்கொண்டு கருத்தழிந்து திரிந்து அப் பிச்சாடனரை நெருங்கி உள்ளுரையோடு கேட்ட கேள்விகளுக்கு அவர் அளித்த விடையாகும்.

இஃது கடவுண்மாட்டு மானிடப் பெண்டிர் நயந்த துறையின் பாற் படும். இவண் அடிகளார் கூறும் தலைவர் உள்ளங்கவர் கள்வனாய் விளங்கும் ஒற்றியூர் உடைய பிரானவர். இப்பகுதியிலுள்ள 165 பாடல்களும் கற்றவர் விழுங்கும் கற்பகக் கனிகளாக திகழ்கின்றன. இதன்கணுள்ள ஒரு செய்யுளின் எழிலைப் பாருங்கள்.

"கண்ணின் மணிபோல் இங்கு நிற்கும் கள்வரிவர் ஊர் ஒற்றியதாய்
பண்ணின் மொழியாய் நின்பாலோர் பறவைப்பெயர் வேண்டினேம்
[படைத்தால்
மண்ணின் மிசையோர் பறவையதாய் வாழ்வாய் என்றார் என்னென்றேன்
எண்ணியறிநீ என்கின்றார் இதுதான் சேடி என்னேடி."

இச்செய்யுள் தலைவி தோழிக்குக் கூறியதாகும். தலைவி தன் தோழியை அழைத்து, "ஏ சேடி! கண்ணிற் கருமணிபோல் இங்கே இருக்கும் கடவுளாகிய இவர் ஊர் திருவொற்றியூராம். இவர் நம் இல்லிற்கு வந்தார். வந்தவுடன் என்னை நோக்கி, 'பண்போன்ற மொழியுடையாய்! உன்னிடத்தில் ஒரு பறவையினுடைய பெயர் (அன்னம்=உணவு) வேண்டி வந்தோம். அப்பறவைப் பெயரை எனக்குப் படைத்தாயானால்; நீ இப்பாரைச் சூழ்ந்த ஞாலத்தில் ஒரு பறவையாய் (கிளி=சுகம்) வாழ்வாய்' என்றார். ஒன்றும் விளங்காததால் 'என்ன?' என்று வினவினேன். 'நீயே யோசித்து உணர்வாய்' என்று கூறுகின்றார். இதன் காரணம் யாதோ அறியேன்" என்றாள் தலைவி என்பது இச்செய்யுளின் பொழிப்பாகும்.

இப்பாட்டிலுள்ள குறிப்பு யாதோ வெனின் பறவை யொன்றை நல்கினையானால் மற்றொரு பறவையாய் வாழ்வாய் (எனக்கு உணவு படைத்தால் நீ சுகமாக இருப்பாய்) என்று கூறுவார் பறவைப் பெயர் வேண்டினேம் படைத்தால் பறவையாய் வாழ்வாய் என்றார். எனவே, பிச்சை புக்கத் தலைவர் தலைவியின் அன்னமென் நடையையும், கிளி மொழி போன்ற இனிய உரைகளையுமே தமக்கு உணவாகக் கொண்டார் என்பது போதரும்.

மற்றொரு செய்யுளிலே, "ஒருபொழுது நான் தலைவரை நோக்கி 'தேவரீர்க்கு என்ன விருப்பம்?' என்றேன். அதற்கு அவர் 'உனது பெயரில்

# கம்பர்

(அ. அண்ணாமலை)

கம்பர் நம் நாட்டுக் கவி சக்ரவர்த்தியாவர். அவர் சோணாட்டில் திருவழுந்தூர் எனும் கிராமத்தில் உவச்சர் குடியில் தோன்றியவர். இவர் தந்தை ஆதித்தர் என்பர். இவர் நூலின் சிறப்பைக்கொண்டு உயர்ந்த குடியில் பிறந்தவரோ, எனக் கருதுகின்றனர். இவர் தம் கலைபுல உயர்வை நோக்கிப் பின்வந்தோர் ஔடத புலவர் கொடைப் புலவர். ஒண்பாவில் உயர் கம்பன், விருத்தத்தில் வல்லுநர். வைரவமுரசாளி, வைரியின் பட்டம், கற்றூர் கவியில் பெரிதாம் தமிழ்க் கம்பநாடன், கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவி சொல்லும என்றெல்லாம் பல அரிய பட்டங்களும் வழங்கினர்.

இவர் பெயர் இயற்பெயரா? காரணப் பெயரா? என இன்னும் ஆராய்ச்சியில் உள்ளது. கம்பையில் பிறந்ததால் கம்பர். ஏகம்பரின் மரூஉச் சொல் கம்பர். கையில் கம்புடைமையால் கம்பர். காளிகோயில் பூசாரியாதலால் கம்பர். கம்புகொல்லை காத்தமையால் கம்பர். கம்பங் தடியோடு வரம் பெற்றமையால் கம்பர் என்பர்.

இவர் சோழனது சமஸ்தான வித்துவான் ஆவர். இவர் வரகவி என் ர். இவரது நூலினுட்புக்கு நோக்குவார் நன்கு படித்தே ராமாயணம் ழுதியிருக்க வேண்டுமெனக் கருதுகின்றனர். இவரது நூலில் திருவாச ம், தேவாரம், பிரபந்தம் முதலிய சொற்செறிவுகளும். காரிகை விருத்தி

---

டையில் உள்ள மெய்யெழுத்தை நீக்கிய நின் முகத்தை விழைகின்றேன். தைத் தருவாய்' என்றார். என்ன கேட்கிறார் என்று புரியாததால், 'ஐயா! பம் றேன். அதை சிறிது வெளிப்படையாய்ச சொல்லுங்கள்' என்றேன். ிப்படையாய்ச் சொன்னால் இருவை' என்கிறார். இது என்ன?'' என்று சேடியைக் கேட்டான் தலைவி.

ஆகவே, உனது பெயரிடையோர் மெய்நீக்கிய முகம் என்றது; நங்கை என்ற பெயரில் ஙகர மெய் நீக்கினால் நகை என்று வரும். உன் நகை முகத்தைத் தருவாய் என்று வெளிப்படையாய்ச் சொன்னால்; நீ (இருவை= இரண்டு 'வை!') வைவை-என்பதாகும். இதனால் அடிகளார் எவ்வளவு நுட்ப மதியுடையவர் என்பது போதரும். இக்கருத்தடங்கிய பாடலைப் பாருங்கள். என்ன எழிலுடன் விளங்குகின்றது.

"திருவையளிக்கும் திருவொற்றித் தேவரீர்க்கென் விழைவென்றேன்,
வெருவல் உனது பெயரிடையோர் மெய்நீக்கிய நின்முகம் என்றார்.
தருவல் அதனை வெளிப்படையாய்ச் சாற்றும் என்றேன் சாற்றுவனேல்
இருவை மடவாய், என்கின்றார். இதுதான் சேடி என்னேடி.''

ளவியல், தொல்காப்பியம், மனுதர்மம், சுக்ரநீதி, காளிதாஸர் கருத்து, குறள், சிவகசிந்தாமணி அடிகளும் காணப்படுகின்றன. இவற்றால் கம்பர் இவைகளையும் நன்கு படித்து உணர்ந்தே ராமாயணம் புனைய துணிந்தார் என்பர்.

இவர் தோற்ற (பிரகிருத தத்துவ) நிலையும் உயிர் (ஆத்மத தத்துவ) நிலையும், பரமார்த்த தத்துவ நிலையும் நன்கு ஓர்ந்தவர். பாவன்மை நாவன்மை மிக்குடையவர். வேதம் சாத்திரம் அநுபவம் கண்ட வுண்மை நீரர் சைவ வைணவ கருத்தில் மயக்கமற்றவர் எனக் கூறுவர். சொல் நயம் பொருள்நயம் தொடைநயம் தெளிவு சுவை செறிவு முதலிய குண நயமும் இசைநயமும் பெருகக் கொண்டவர். இவர் கலி விருத்தம், ஆசிரியத் துறை, கலி நிலைத்துறை தரவுகொச்சகக் கலிப்பா, வஞ்சி விருத்தம், வஞ்சித்துறை முதலிய பாவும் பாவினமும் அமைய நூல் யாத்தார். முதல் நூலில் இருந்து சில விகற்பமும் சுட்டியுள்ளார். 'பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி அழியா மரபினது வழி நூலாகும்' என்பது இலக்கணமாகக் கொண்டு சில மாற்றமும் புரிந்தார்.

குமார சம்பவம் கம்பர் கூறவில்லை. வில்லை முறித்ததும் நீலமாலை கூறியதும் வான்மீகர் கூறவில்லை. தமிழ் முறை நன்கறிந்த பெருமகனார் அகப்பொருள் துறையமைத்து காட்சி முதலிய சுட்டினர். சுருக்க சொல்ல வேண்டிய இடத்துச் சுருக்கியும் பெருக்கவேண்டிய இடத்துப் பெருக்கியும் உள்ளார்.

இவர் எழுதியது பெருங் காவியமாகும். காவியம் கத்தியம் (வசனம்) பத்தியம் (செய்யுள்) சம்பூ (தொடர்நிலைச் செய்யுள்) மூன்று வகையில் வரும். இங்கு ராமாயணம் தொடர்நிலைச் செய்யுளின் பாற்பட்டதே. நிகண்டு பிரயோகம் (வாச்சியார்த்தம்) குறிப்பெடுத்தல் (லட்சியார்த்தம்) பொருள் கண்டு கூறல் (வியங்கியார்த்தம்) எலாம் உரை நோக்கும்போது புலனாகும். காவிய இலக்கணமாகிய வாழ்த்து வணக்கம் வரும்பொருள் உரைத்தலும், புருஷார்த்தம் நான்கும் தன்னிகரில்லா தலைவனையும் மலை கடல், காடு, வளநகர், பருவம், இருசுடர் தோற்றம், நன்மணம் புணர்தல் பொன்முடி கவித்தல், பூப் பறித்தல், புனல் விளையாடல் தேன், மது சிறு வரைப் பெறல், புலவியில் புலத்தல், கலவியில் களித்தல், மந்திரம், தூது, செலவு, இகல் வென்றி, சந்திபோல் தொடரல், சருக்கம், இலம்பகம், பரிச்சேதம் எலாம் உள்ளன. சொற்செட்டு எழுத்துச் செட்டு இசைச் செட்டு, உயிர்ப்புச் செட்டு, ஓசைப் பொலிவு உள்ளமை ஆய்க. உருக்கம் பரிவு, உணர்ச்சி பணிவு, இரக்கம் தமிழின் அருஞ்செல்வங்கள். அவற்றையும் இடை இடை இயைத்தார் என்க.

இதனால்:—

இம்பர்நாட்டில் செல்வமெலாம் எய்திஅரசாண் டிருந்தாலும்
உம்பர்நாட்டில் கற்பகக்கா ஓங்குநிழ லிருந்தாலும்
செம்பொன்மேரு அனையபுயத்தில் சேர்இராமன் திருக்கதையில்
கம்பநாடன் கவிதையிற்போல் கற்றோர்க்கிதயங் களியாதே.

என எழலாயிற்று. இவர் இராமாயணமே யன்றி, சரசுவதியந்தாதி, திருக்

கை வழக்கம், சடகோபரந்தாதி, ஏரெழுபது, சிலை, எழுபது எனப் பல நூல்களும் யாத்திருக்கிறார்.

இராமாயணம் இதிகாசத்துள் ஒன்று. உபதேச பரம்பரையில் வரும் வரலாறுரைக்கும். வேத நியாயத்தை நியாய பிரமாணத்தால் சுட்டும். வேதத்தின் கருத்து மலிந்திருத்தலால் உபப்ரும்ஹண மென்பர். (வளர்ப்பது) பல கிளைக்கதைகளை விரித்துளது. இதிகாச புராணம் என்பதில் முன்னர் இதிகாசம் என்பதால் இதன் உயர்வு விளங்கும்.

இராமாயணம், இராமனுடைய நெறி எனப் பொருள் ஆம். அயனம் கதை செலவு சேறல் சம்பவம் நெறி இடம் விடயம் எனினும் பொருந்தும். ராம்=நற்குணம் பொருந்திய, அயனம்=கதையாம். இராமனுடைய குணாதிசயங் குறிக்கும். அழகன் என்றும் மகிழ்விப்பவன் என்றும் மனத்திற் கினியன் என்றும் கூறுவர். இது ஆறும் வேற்றுமை செய்யுட்கிழமைகண் வந்தது. முதனூலின் பெயரே தமிழிற்கும் வந்தது. உயர்ந்த தலைவன் நிலை:—உயர்ந்த குணம் மேலான குணம் இயற்கை யழகு கொடை குணம், அதிபதி முடிக்குஞ் சக்தி வித்தையில் சிறப்பு கருத்தில் ஓங்கல் முதலிய உத்தம நாயகனாக இருக்கவேண்டியதை விளக்கினர். இடை இடையே துணைநாயகர் நாயகிகளின் கூற்றினையும் நன்கு விளங்க வைத்தனர்.

கம்பர்: நூன்முகம், சிறப்புப்பாயிரம், ஆற்றுப் படலம், நாட்டுப் படலம், அயோத்திநகர் வருணனை, தசரதன் அரசியல், இராமாவதாரம் எனத் தொடங்கினர். வான்மீகம் நாரதர் கூறியன, பிரமன் கூறியவை, தன் கருத்து சருக்கம் குசலவர் கூறியன, அயோத்தி வருணனை, சரயூநதி வருணனை எனத் தொடங்கினர் இவை வேற்றுமை.

இவர் தம் நூலில் பெற்றோர் கடமை, விபீடணன் சரணாகதி, ஏகபத்தினி விரதம், சகோதர ஒற்றுமை முறையுறு, சண்டை அமைய பாடினர். அறம் உண்மை ஒழுக்கம் பிறப்புரிமை பழியச்சம் கருணை வீரம் நட்பின் சிறப்பு அரச நீதி மாணவர் முறை செய்நன்றி யறிதல் முதலிய மேன்மை குணம் பொறித்துளார். செம்பொருள் கருத்துப் பொருளாக தத்துவ அறிவு, சத்தியவாசம் இன்சொல்லுடைமை பொறுமையுடைமை பயனடைவு விசேட அறம் அடியார்க்குரிய கைங்கரியம் இன்னவும் ஆராய்ச்சியில் வைத்தார். பரத்வம் உபாயம் தோன்ற நின்றன. அஷ்டாட்சரத்திலும் பஞ்சாட்சரத்திலும் }முக்கிய எழுத்தாம் ராம என்பதும் 'மும்மைசால் உலகுக்கெலாம் மூலமந்திரம்' ஓங்காரப் பொருள் தேறுவார் தாமுன்னை உணர்வர் எனலால் ஓங்கார வடிவினன் என்றார். இராமர் சீதை இலக்குமணர் நிலையை ஓம் எனர் மரபு. தன்னை யறிதலும் தலைவனை யறிதலும் விரோதியை யறிதலும் உபாயமறிதலும் பயனறிதலும் ஆகிய அர்த்தபஞ்சகமும் அநுமான் வசிட்டர் விசுவாமித்திரர் அகத்தியர் முதலிய ஆசாரிய தர்மமும் சீதை, மண்டோதரி, கௌசலை, கைகேயி, சுமித்திரை, தாடகை, சூர்ப்பணகை, தாரை, அநசூயை முதலிய ஸ்ரீதர்மமும உண்டு. நூல் ஆய்வில் திராட்சாபாகமும் நாரிகேளபாகமும் கதலிபாகமும் மதுபாகமும் க்ஷீரபாகமும் காணலாம். இவர் வரைந்த கவியை நன்கு ஆய்ந்த பல மொழி ஆன்ற பெருமக்கள் பல்லாற்றானும் உயர்த்தி யுரைத்திருக்கின்றனர். அப் புகழ் மொழியுள் சில கூறலாம்.

இவர் காவியமே சக்ரவர்த்தி யாக்கியதென்பர். ஹோமர், விர்ஜில், தாந்தே, ஷேக்ஸ்பியர், மில்டன், மோலியேர், கதே முதலிய பிற நாட்டுப் புலவர்களையும் கச்சியப்பர், இளங்கோ, சாத்தனார் முதலிய தமிழ்ப் புலவர்களையும் நன்னய பட்டர், சந்த பட்டர், துளசிதாஸர், காளிதாஸர் முதலிய வரையும் இவர் வென்றுவிட்டார். இயற்கையைப் பற்றியும் கடவுளைப் பற்றியும் போற்றிய ஹோமர், மில்டனையும் கடந்தார். ஜெருஸலத்து டாஸோ என்பார் கட்டும் கதையினும் இவர் கதை உயர்ந்துவிட்டது. வர்ஜில் வரைந்த இயற்கை வர்ணனையையும் மிக்கோங்குமாறு ஆங்காங்கு வருணித்தார். ஷேக்ஸ்பியர் சுட்டும் உறப்புகளினும் இவர் அமைத்த உறப்புகள் மிக விஞ்சியவையே. ஆடிசில், ஹோமர் காட்டும் நகர வர்ணனையைக் காட்டினும் இவர் சுட்டிய வர்ணனை மிகையாகும். பாரசீக புலவராம் பெர், டூசியைக் காட்டினும் காவிய நடை ஓங்கியது. பல நூல்கட்கும் எடுத்துக் காட்டாக ராமாயணம் அமைந்தது.

இவர் சரிதம் தொண்டைமண்டல சரிதம், தமிழ்நாவலர் சரிதை, சோழமண்டல சரிதம் முதலிய இடங்களிலுண்டு. கம்பர் பாடிய பாடல் 10500, வாணிதாஸர் பாடியன 1500, முற்றும் 12000 பாடலாயின. இவர் காலம் 855 என்றும் 1185 என்றும் சுட்டுவர். வான்மீகர் 7 கோடி மந்திரத்தை 24 எழுத்தால் காயத்திரி அமைய அதன் முதல் எழுத்தை ஆதாரமாக வைத்து 24 ஆயிரம் பாடல் பாடினர். இதைச் சுருக்கிக் கம்பர் 12000 பாடல் பாடினர் என்பர்.

இவர் இருந்த இடத்தே ஒரு மேடு உண்டாம். அதைக் கம்பர் மேடு என்பதுண்டாம். இவர் சமாதி நாட்டரசன் கோட்டையில் உளதாம். இவ்வூர் இப்போது கதிராமங்கலம் எனக் கூறப்படுகிறது. இவர் கால புலவராகக் கருதப்படும் புகழேந்தி, ஔவை, ஒட்டர், சேமிநாதர் முதலியவர்கள் கருதப்படுகின்றனர். இப்போதுள்ள கல்வெட்டு சாசனமும் பிறவும் துணை கொண்டு ஆராய்வோர் சுட்டும் விகற்பம் புரியவில்லை.

இவர் தம் சரிதத்தால் மாணவர்கள் அடையும் பயன் சில உண்டு. எளிய குடும்பத்தில் பிறந்து ஏற்றமிக்கவராக ஆனமை, கல்வி வளர்ச்சியில் சிறப்புடைமை, குன்றா ஊக்கத்தால் பெருநூல் யாத்துப் பெருமை பெற்றமை, அரசனோடிருந்து ஆண்மையோடு விளங்கியமை எலாம் கண்டு அங்ஙனம் வர முயலல் வேண்டும். இவர் காலத்திற்கு முன்னர் உள்ள சமண ராமாயணம், பௌத்த ராமாயணம், கூர்ம புராணம், வடமொழி ராமாயணங்களின் கருத்தைத் தனது கருத்தாக எடுத்தாண்டமை நன்கு புலனாகும்.



# அஹிம்சை யாருக்கு வேண்டும்?

(A ராமலிங்கம்.)

அஹிம்சை என்பது ஹிம்சை என்ற வார்த்தைக்கு நேரெதிரான பதம் என சுருங்கக்கூறுதல் இயலும் எனினும் அதன் தனிப் பெரும் அழகு இச்சிறு "ஹிம்சை" என்னும் வார்த்தைக்கு மறுப்புரையாக கூறுவது மட்டும போதாது என்பதே நான் கண்ட உண்மை.

பண்டைக் காலந்தொட்டே நமது தேசத்திலே இம்மாதிரியான கொள்கை பல்வேறு பெயரால் பரிணமித்து வந்திருக்கிறதென நம் முன்னோர் இயற்றிப்போந்த பல நூல்களும் தெள்ளத்தெளிய கூறியிருக்கின்றன. நமது பரத கண்டம் தவிர உலகில் உள்ள மற்றும் ஏனைய தேசங்களில் இம்மாதிரியான லக்ஷியம் இருந்ததாக இல்லை. ஆனால் இன்று உலகிலுள்ள மண்ணாசை பிடித்த மகா உக்ரிஷ்டர்களால் சிதைவுற்று அல்லும் பகலும் ஆண்டவனை நோக்கி சுதந்தரம் கோரும் கிரீஸ், சைனா இவ்விரு நாடுகளும் ஆத்மீகத் துறையில் நல்லிடம் பெற்றிருப்பதாக, சரித்திரம் கூறுகிறது. ஆனால் அக்கொள்கைக்கு பூரண ஆதரவு அந்நாடுகளில் இருந்திருந்தால் இன்றைய நிலைமை ஏற்படுவதற்கு காரணம் இருந்திருக்காது.

அஹிம்சை என்பது அனுஷ்டிக்க விரும்புவோருக்கு ஆரம்பத்தில் வெகு சிரமமேயாகும். அஹிம்சையை நடை முறையில் அமுலுக்கு கொண்டுவர வேண்டுமானால், மனிதனுக்கு வெகு கட்டுப்பாடு வேண்டும். தன் மனம்போன போக்கில் நடந்துகொள்ளும் இயல்பினருக்கும், எண்ணரிய நூல் பல கற்றும் இக்கொள்கை பிடிக்காது என்பது வாஸ்தவமே. எண்ணரிய நூல்கள் கற்று விட்டதனால் மட்டும் அறிவு வளர்ச்சியுற்றுவிட்டதெனக் கூறுவது சிலாக்கியமென சொல்ல முடியாது. நூல்கள் கற்றாலும் தமிழ் பெரும்தகையார் வள்ளுவர் கூறியபடி,

"கற்க கசடற கற்பவை கற்றபின், நிற்க அதற்குத் தக"

என்ற உபதேசத்தை மறந்து, தன் குற்றம் உணராத தான்றோன்றி வீரனாய், பிறர்க்குரைக்கும் பேதையாய் இவ்வுலகில் வாழ்வது பூமிக்கு வீண் பாரமேயன்றோ! தன் குற்றங்களை ஆய்ந்துகொள்ளும் தன்மையும் அதற்காக உணரும் இயல்பும் எப்பொழுது வருகிறதோ அன்றுதான் அவன் மானிட அறிவு பெற்றவனாகிறான். தன் குற்றம் அறியாத மனிதன் உருவத்தில் மனிதனாக இருந்தாலும் குணத்தில் விலங்குக்கும் இவனுக்கும் வித்தியாசம் என்னே! தனது குற்றத்திற்காகத் தன்னைத் தண்டித்துக்கொண்டு அவ்வாறு இனி நடந்துகொள்ளாமல் இருப்பதற்கு முயற்சிப்பவன் எவனோ அவனே அஹிம்சை எனும் ஆயுதத்தை எடுக்கும் திறமையுள்ளவன்.

பல்லாயிர வருடங்களுக்கு முன்னரே மகான் புத்தர் நமது பரத கண்டத்தில் அவதரித்தார். அவரது லக்ஷியமென்ன! அவர் கூறிய போதனையென்ன! எவ்வுயிர்க்கும் அன்பாயிரு, அன்பே கடவுள், அதுவே நித்யானந்தம்; ஜீவாத்மா தனிப்பட்டதல்ல. பரமாத்மாவின் பொறியே ஆகும். இறுதில் எல்லாம் ஒன்றே. ஜீவாத்மா பிரகாசிப்பதற்கு அறிவு என்னும் தூண்டுகோல் இருக்கிறது. அதை இறைவன் நமக்கு அன்புடன் அளித்தும் அதன் உபயோகம் முழுதும் உணர்ந்துகொள்ளாதிருக்கிறீர்களே என எண்ணரிய பிரசங்கம் புரிந்திருக்கிறார். இதுமட்டுமா! கிரீஸ் தேச தத்

தவஞானி "சாக்ரடீஸ்" வாழ்க்கையைச் சற்று கூர்ந்து நோக்குங்கள். அவர் வாழ்க்கையில் பட்ட கஷ்டங்கள் சொல்லிமுடியாது [illegible] கஷ்டமே அநுபவித்தார். ஆனால், அவர் [illegible] தும் தவறவில்லை. ஆண்டவன் இட்ட கட்டளையைச் சிரமேற்கொண்டு ஆத்மார்த்திகத் துறையில் எவ்வளவு தொண்டு செய்யமுடியுமோ அத்தனையும் மக்களுக்கு செய்தார். தமக்கு தீங்கு செய்தவர்க்கும் நன்மையே செய்தார். வாழ்க்கை அநுபவத்தில் நடத்திக் காட்டிய பெரியாரில் இவரும் ஒருவர்.

பிறகு, இன்று உலக நாகரீகத்தில் முன்னேறிய தேசங்கள் எனக் கூறப்படும் ஐரோப்பா, அமெரிக்கா என் மற்ற தேசங்களின சில பாகத்திலும் பரவப்பட்டிருக்கும் கிறிஸ்து மதத்தைப் பாருங்கள. தேவ குமாரனுய், பரிசுத்த ஆவியால் இவ்வுலகிற்கு வழிகாட்ட வந்த உத்தமர். இயேசு பெருமானது வாழ்க்கையையும் அவரது உபதேசங்களையும் கேளுங்கள். "ஒரு கன்னத்தில் அடித்தால் மறு கன்னத்தையும் திருப்பிக்கொடு," "உன்னை ஒருவன் பலவந்தமாக ஒரு மைல் கூப்பிட்டால் 2 மைல் போய்விட்டு வா", "நீ சௌக்யமாக வாழ விரும்புகிருயா! ஆனல் பிறருக்குத் தீங்கு நினையாதே" இன்னும் இதுபோல் எவ்வளவோ போதனைகளை மனித வர்க்கம் நலனே வாழ்வதற்குரியதும் ஆத்மீகத் துறையிலும் திருவாய மலர்ந்தருளி யிருக்கிறார்.

அஃதே போல், இவ்விருபதாம் நூற்றாண்டிலும் அஹிம்சை என்னும் அரும் பெரும் கொள்கையை யாவரும் அநுஷ்டிக்குமாறு நம் மாபெரும் தலைவர் மகாத்மா காந்தி சதா உபதேசிக்கிறார். அவரது ஜீவியத்தில் நடத்தும் சமபாஷணைகளில் அஹிம்சை யெனும் வார்த்தை கலப்பில்லாமல் பேச அவருக்கு மனமில்லை. ஏன்! அன்னருக்கு அஹிம்சையில் உள்ள நம்பிக்கைதான் காரணம்.

அரசியல் உலகில் பலர் பலவிதமாக வியாக்கியானம் செய்தபோதிலும், அவர்கள் கல்வித்துத் தகுந்தவாறு அழகுபட குறை கூறலாமே யல்லாது, இயற்கையில் எத்தனை மாண்புடைத்தாயது என்பது அவர்களுக்கே தெரியும். அகில உலக அரசியல் தீர்க்க தரிசனம படைத்த பெரியார்கள் சிலர் இன்று காந்திஜியைக் குறை கூறினும், அஹிம்சைக்காக அல்ல, அரசியல் பிரச்சினைகளுக்காகவே என்பதே எனது அபிப்ராயம்.

யார் எவ்வாறு கூறினும் அஹிம்சை என்பது மனித ஜீவியத்திற்கு மகாத்மா தந்த ஓர் அரிய பொக்கிஷமேயாகும்.

வாழ்க்கை முறையில் மனிதனை உயர்வடையச் செய்வது அஹிம்சை தான். அஹிம்சை, ஆத்மாவிற்கு சாந்தியைக் கொடுக்கிறது; அஹிம்சை ஆரோக்கியத்தை உண்டாக்குகிறது; அஹிம்சை நீண்ட ஆயுளைத் தருகிறது; அஹிம்சை வாழ்க்கையில் வெற்றியைத் தருகிறது; அஹிமசை உலகிலுள்ள எல்லா ஜீவன்களிலும் அன்பு பூணச் செய்கிறது. ஏன்! அஹிம்சையால் ஆகாத காரியம் ஒன்றும் உலகில் இல்லை என்றே கூறுதல் பொருந்தும். மகாத்மாவின் சாதாரண நடை முறைப் பேச்சு என அஹிம்சையை நினைக்காமல், அவரது கருததுக்களை, உண்மையை, செயலை, காண்பவர்க்கு அதன் உண்மை விளங்கும் என்பதில் சற்றும் ஐயமில்லை. ஆகவே அறிவும் ஆற்றலும் நிறைந்த மனித சமூகத்திற்கு "அஹிம்சை" ஓர் அரிய பெரிய பொக்கிஷமே.

  

# "குன்மம்" அல்லது குடல் புண்

(காரை-டாக்டர். மோஹன்.)

## 2

நிதான உணர்ச்சியை இழந்து உணவை உண்பதனால் எத்தனை வகைப்பட்ட இன்னல்களுக்கு வாழ்க்கைத் தோணியை இலக்காக்க வேண்டி இருக்கின்றதென்பதை யோசியுங்கள். ஆகையால்தான் இந்நோய் உற்பத்தியாவதற்கு முதல் காரணம் உணவுதான் என்பதை வைத்திய தத்துவ நூல்களால் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. இக் கருத்தைக் கொண்டே அருள் உபதேசக் குறளில்,

"இழிவறிந் துண்பான்க ணின்பம்போ னிற்குங்
கழிபே ரிரையான்க ணோய்"

என்ற அழகான உயிர் சொற்கள் நிறைந்த புவி போற்றும் பொன் சொற்சித்திரத்தை ஊன்றிக் கவனிக்கவேண்டிய தவசியம்.

இங்கு இரை என்னும் பதத்திற்கு பொருள் தீனி என்பதாகிறது. ஆனால் மனிதர்களின் உணவை தீனி என்று சொல்லுவது வழக்கமில்லை. மிருகங்கள், பக்ஷி இனங்களுக்கு வைக்கும் உணவிற்குத்தான் தீனி என்று சொல்லுவது வழக்கம். தீனி தின்னும் விலங்கினங்களுக்குப் பகுத்தறிவு கிடையாது. அதுபோலவே மனிதர்களில் தீனிபோல தின்னும் வகுப்பினர்களுக்காக, இங்கு குறளால் விளக்கப்பட்டுள்ளது. அளவுக்கு மீறினால் அமிர்தமும் நஞ்சென்பார்களே!

சரீர இயல்புணர்ந்து நிதான சக்தியுடன் உணவுண்டு இருப்பவர் நீண்டநாள் உலகிலவதார மெடுத்ததன் பயனை நுகர்ந்துகொண்டிருக்கலாம் என்பதற்கு,

"அற்றா லளவறிந் துண்க வஃதுடம்பு
பெற்றா னெடிதுய்க்கு மாறு"

என்ற குறளின் வாக்கியங்களையும் கவனிக்கவேண்டும். கவனித்து படித்த இடத்திலேயே வைத்துவிடுவதற் கன்று. படித்துணர்ந்த அளவு செயலினும் நடந்துகொள்வதற்கு ஒவ்வொரு வேளையும்—உண்ட உணவு அற்று பசி ஆரம்பமாவதுணர்ந்து பின் ஆகாரங் கொள்ளவேண்டியதற்கு.

ஆசைக்காக வென்றோ, தோழர்களின் பிடிவாதத்திற்காகவோ விசேஷ தினங்களின் மகிழ்ச்சியிலோ தனது சரீரத்திற்கு ஏற்றுக்கொள்ளாத (உண்ட உடன் ஏதேனுமொருவகை தொந்திரவை விளைவிக்கக் கூடிய) ஆகாராதிகளைப் பாஷாணமென்று பாவித்து கண்டிப்பாய் உட்கொள்ளவே கூடாது. ஆசையும், தோழர்களும், தினங்களும் அவஸ்தை

க்கு மருந்தாக முடியாது. ஆசையும் நாணும் கூடி மோசம் செய்ததை நினைத்து தோழர்கள் நின்று விழித்துக்கொண்டிருப்பார்கள் அவ்வளவுதான். அவஸ்தைக்குரிய ஔஷதமென்று ஒன்று செல்லும்வரை நிவர்த்தியாவதில்லை. அதிலும் அவஸ்தைக்குரிய காரணம் நினைவிலிருந்துவிட்டு பின் பழைய பாடத்தையே திரும்பவும் படிக்கக் கூடாது.

"ஒருவர் ஒரு குற்றமும் செய்யாமலிருக்கத்தான் முயலவேண்டும். தவறி ஒரு குற்றம் செய்துவிடலாம். உடனே அதை உணர்ந்து அதிலிருந்து—தெளிந்து விடவேண்டும். மேலும் மேலும் குற்றங்கள் செய்துகொண்டும் உணர்ந்தும் உடனே மறந்தும் விடுகின்ற கூட்டத்தவர்களை மனித வர்க்கத்துடன் சேர்த்துக்கொள்ள வியலாது. ஒரு குற்றம் செய்து உணர்ந்த க்ஷணத்திலிருந்து அவனது இறுதி காலம்வரை மறுகுற்றம் செய்வதில்லை என்னும் சபதம் நினைவி லிருக்கவேண்டும்."

"பொது அறிவு தீபம்."

உண்ட ஆகாரம் ஜீரணமாவதற்குமுன் சம்போகத்தில் ஈடுபடுவதும், இரத்தக் குழைகளும், நாதக் குழைகளும் உஷ்ணமடைந்து புடைத்து உணர்ச்சி பெறும்படி மனத்தாலும்—சரீரத்தாலும் சேஷ்டைகள் புரிவதும், ஆடல், ஓடல், வேகமான வாகன சவாரிகள் செய்வதும் பெரிய அபாயத்தை விளைவிக்கும் செய்கைகளாகும். இதனால் அறிவுக் கருவிகள்—(Organs of Sense) இயற்கைக்கு அதிகமான உஷ்ணமடைந்து உட்கருவிகட்கு விழிப்புண்டாக்கி அதது அதனதனிடத்தில் தனது இயல்பைக் கடந்து கொதிப்படைந்து விடுகின்றன. இதனுதவியா லசையும் சிறு கருவிகளை எல்லாம் ஸ்தம்பிக்கச் செய்துவிடும். உணவு ஜீரணமாக வேண்டிய இடத்திற்குச் செல்லாது. மேல் சுற்றிலுள்ள குடல்களிலேயே தயங்கி விடும். அவ்வாறு ஒரு க்ஷணமும் உணவு குடலுக்குள் தேங்கக் கூடாது.

அடிக்கடி இரத்தக் குழைகளின் தன்மையிலுள்ள மற்ற கருவிகள் இம்மாதிரியான சந்தர்ப்பங்களில் அடுத்தடுத்து உஷ்ணமடைவதனால் நடவடிக்கையின் இறுதியில் திடீரென வியர்க்கும்; சற்று நேரத்தில் சரீரம் முழுதும் குளிர்ந்துபோகும். இந்நிலையி லிருந்துதான் அறிவுக் கருவிகளான கண்கள், மூக்கு, காதுகள், நாக்கு, சர்மம் இவ்வைந்தும் இயற்கை இழந்து விடுவதனால் இராஜக் கருவிகளான மூளை, இருதயம், இரத்தாலயம், குண்டிக்காய், ஈரல்கள் தளர்ந்து தனது தொழிலை இயற்கையாக செய்யும் சக்தியற்று இளமையிலேயே முதுமைக் கோலத்தி லாய்விடுகின்றன.



# ஜ்யோதிஷ பல ரகஸ்யம்



(ஸி. பி. ஆனந்தம்.)



(சென்ற இதழ் தொடர்ச்சி.)

### புதன்

இன்னும் ஆசார சீர்திருத்தம்-சமூக முன்னேற்றம்-புதியன காணுதல்-எழுத்து வன்மை-சாகஸம் ஆகியன புதக் கிரகத்தின் சிறப்பியல்கள் என்பர். ஞானத்தினால், அல்லது இதர சக்திகளினால் வருமுன் அறிதல்-அந்தர்முக திருஷ்டி எவரையும் முக்கியமாகத் தன்னிலும் உயர்ந்தோரை-வலிமை மிக்கோரை தன் வழி இணங்கச் செய்யும் ஆற்றல்-நேர்மை மிக்க வசீகரம்-சிறந்த யோசனை வாத வைத்திய நுட்பங்கள்-நம்பிக்கைக்குரிய தன்மை-மொழி வல்லபம்-இவை முதலியன புதனின் தனி இயல்புகள் ஆகும். நேசம்-நேயர் கூட்டங்கள்-புத்தி உழைப்பு-ஒருவகை திட்டங்களுள் அடங்கும் கிரமமான கற்பனா வளம்-இதத்தை-இனிமையை உண்டாக்கும் குணம்-அமைதி அல்லது உபசாந்தம் கோரிய நடவடிக்கைகள்-ராஜி முயற்சி புதனின் பொதுவியல்கள்.

கலைகளுக்கெல்லாம் தாயகமாய்-அபிவிருத்தி ஒன்றே தன் குறிக்கோளாக வுடைய இதனை தாய் வழி-பந்து வர்க்க வியாபகங் கொண்டதாய் மாதுல காரகன் என்பர். இத்துணைச் சிறப்புகளுக்குரிய புதன் பொருள் எல்லையில் பலவீனமுடையதாகும். அவ்வழி உடல் வளர்ந்து வலுக் குறைந்தது. நிகழ்கால பல வித்திகளில் ஒரு அளவைக் குட்பட்டது. இதன் தனித்த சுபாவமான பலன்கள் இவை. இனி, சேர்க்கைகளில் சேர்ந்த கோள்களின் இயலும் கூடிப் பலன்கள் சிறக்கவும் கூடும்.

பொதுவில், புதனது சுபாவ பலன்களுக்குரிய எல்லைகள் வானத்து இரண்டு உண்டு. அறுபது பாகை முதல் தொண்ணூறு பாகை மட்டும் அவற்றுள் ஒன்றும், பாகை நூற்று ஐம்பது முதல் பாகை நூற்று எண்பது மட்டும் மற்றொன்றும் கிரமமாக இடம் பெறுகின்றன. இவற்றை முறையே 'மிதுனம்'—'கன்னி' ஆகிய மீனங்களாகச் சொல்வர். இவை புதனுக்கு அதன் சுபாவ பலனுக்குரிய 'ஆட்சி வீடுகள் (Ruling Houses in the Zodiac) ஆகும். இவற்றுள் முன்னது இதற்குரிய சுபாவ பலன் நேர்முகத்து வரும் இயல்புடன் இருக்கும்; பின்னதில் அது எதிர்மறையான இயல்புடையதாக இருக்கும். எனவே, புதனின் சுபாவ பலனில் நேர்முக-புதன் (Mercury-Positive), எதிர்மறை-புதன் (Mercury-Negative) என முறையே மதிப்பர். இவற்றுள் நேர்முக எல்லையினும் எதிர்முக எல்லையின் பலம் விசேஷங் கொண்டதாகும். ஏனெனில், இங்குதான் இதற்

குரிய உச்ச பலத்திற்குரிய இடம் வாய்க்கிறது. அத்துடன், மூலத் திரிகோண பலமும் இந்த ராசியில்தான் சேருகின்றது. இதனை முறையே பதினைந்து-இருபது பாகைகளாகக் கணக்கிட் டிருக்கின்றனர். அதாவது பாகை 150 முதல் பாகை 165 மட்டும் உச்ச பலமும் பாகை 165 முதல் பாகை 170 மட்டும் மூலத் திரிகோண பலமும் என்னலாம். உச்ச ராசியான இக் கன்னிக்கு எதிராக வரும்-அதாவது ஸப்தம ராசி மீனம் நீசமாகும். இதன் எல்லையைக் காணுவதற்கு உச்ச எல்லைக்குரிய பாகைகளுடன் பாகை நூற்று எண்பது கூட்டவேண்டும். இவ்வழி பாகை 330 முதல் பாகை 180 வரை நீச எல்லை என்னலாம்.

இவற்றுள், நேர்முக எல்லை-மிதுனம் ஆட்சி பலங்களுக் குரியதாய் அதன் சாதாரண பலன்களுக்கும், எதிர்முக எல்லையான கன்னியா ராசியில் உச்ச பலங்களுக்குரிய பாகைகளுள் உன்னதமுள்ள பலன்களுக்கும், அதன் மேல் மூலத்திரிகோண பலத்திற்குரிய பாகை வரையும் பலம் நிறைந்த—சிறந்த பலன்களுக்கும், அதன்மேல் அந்த ராசியின் எஞ்சிய பாகையுள் ஆட்சி பலனுக்குரியதாய்—ஆனால், எதிர்மறைப் பலன்களுக்குரியதாய் சில அபூர்வங்களில் இருக்கும். நீச எல்லையின் பலம் இக விருத்திகளில் பலமற்றுப் போய் நீய பலன்களுக்குரியதாக விருக்கும். எனினும், இதன் நேர்முக எல்லையான மிதுனத்திற்கு இந்த நீச எல்லை தசம மத்ய ஸ்தானமாக அதற்கு இராஜ்யமாதலால், இவ்வழி இருக்கவேண்டிய விசேஷ பலன்கள் யாவும் இம்மை-மறுமை கடந்த தெய்வ எல்லையின் சித்திகட் குரியதாய்—அத்யாத்மத் துறையில் பல விருத்திகள் உன்னதங் கொண்டதாக விருக்கும்.

இந்தப் பலன்கள் உதயவரைக்கு (Ascendant) புதன் இடம் ... எல்லைகளைக் கொண்டு ஸ்திதி பலனும் இதன் உரிய ஸ்வக்ஷேத்... களை உதய வரையினின்றும் கணக்கிட்டு புதனது ஆதிபத்ய பல... றையில் வாய்க்கும் கோள்களின் பலங்களின் அளவையில் ...ாதனின் சேர்க்கை பலனும் காணவேண்டும். இதில் இப்புதனுக்குக் கேந்தி... சுபபல ப்ரதானமென்றும் ஆனால், ஆதிபத்திய பலன் நீயதென்றும் கூ...ம் —பார்வை பலம் காணுவதில இதற்கு சம சப்தம சம்பந்தம் தவிர விசேஷப் பார்வைகள் எதுவுமில்லை. எனவே, இதுபற்றிய பலன்களுக்கு இன்னும் இதர கோள்களின் சுபாவ பலன்களும்-இயல்பும் கண்டுதான் கூறலாமாதலின், மேலே இந்தப் புதனை அடுத்து 'வியாழ' உலகின் விசேஷங்களைக் காணுவோம். பலன்தரும் கோட்களில் மூன்றாவதாக வருகிறது வியாழன்.



# திரிந்த பழமொழி

(ஆ. ஜீவரத்தினம் அம்மாள்.)

"வெண்ணெயுண்பவன் ஒருவன், சுண்.........பவன் ஒருவன்" என்பது ஒரு பழமொழி. இது இருவர் சேர்ந்து செய்யும் ஒரு தொழிலில் வரும் பயனைத் தானே அநுபவித்து மற்றவனை அதில் வரும் கஷ்டத்துக்கே ஆளாக்கும் ஒருவனைக் கண்டு கூறுவதாகும். வெண்ணெய் உண்பதற்குச் சுவையானது உடலுக்கு உரமளிப்பது. நிறத்திலும் பருமையிலும் வெண்ணெயை ஒத்திருப்பது சுண்ணாம்பு இதைத் தின்போன் வாய், குடல் வெந்துவிடும். இதனால் "பயனை" வெண்ணெய்க்கும் "கஷ்டத்தை" சுண்ணாம்புக்கும் ஒப்பிட்டு "வெண்ணெயுண்பவன் ஒருவன் சுண்ணாம்புண்பவன் ஒருவன்" என்று கூறிப் போந்தனர் நம் முன்னோர். இவ்வரிய பழமொழியில் "சுண்ணாம்புண்பவன்" என்ற சொற்றொடர் எறக்குறைய அதேபோல் ஒலிக்கும் ஒரு ஆபாசச் சொற்றொடராகத் திரிந்து வழங்குகிறது.

மாமியார் மருமகன்பால் மிக்க பற்றுதல் கொண்டிருப்பது இயல்பு. ஏன்? "பெண்ணைக் கொடுத்தேனோ கண்ணைக் கொடுத்தேனோ" என்றபடிக் கண்போன்ற தம் பெண்ணைக் காப்பாற்றுபவன் மருமகனன்றோ? மருமகனை மகனினும் மேலாக மதிப்பார் மாமியார். மருமகனுக்கு ஏதேனும் ஒன்றளிக்க மாமியார் இஷ்டப்பட்டால் எப்படியாவது தம் கொழு-ரைச் சரிகட்டிக் கொடுத்தே தீருவார். பெரும்பாலும் மாமியார் தம் மரு லும் மோருங் குடித்துப் பருத்து வலுப்பெற்றிருக்க வேண்டு கலை விரும்புவார்; இஃது உலக வியல்பு. ஆகையால் மாமியார் மரு ளாக வ'டுக்குப் பசு வாங்கியனுப்புவார் என்று கூறுவதில் என்ன புதுமை மாதுல து? ஆனால் மாமியாருக்கு மருமகன்பால் சலிப்பு உண்டானால் எல்லோ நடக்காது. இதுபற்றியே பெரியோர்கள் "மாமியார்க் கிஷ்டமானால் மாடுங் கன்றுஞ் சேரும்" என்றொரு பழிமொழி கூறிவந்தனர். இப்பழமொழியில் "இஷ்டமானால்" என்பது "கிட்டே போனால்" என்று கொடுந் தமிழாகத் திரிந்து விபரீத அர்த்தமாயிற்று.

"எத்தாக...........தட்டான் பொன்னாக விளைந்ததாம்......" என்பது மற்றொரு பழமொழி

மேற்கூறிய பழமொழியைக் கருதுவோம். தட்டான் உரைகல் ஒன்று வைத்துக்கொண்டு தன்னிடம் கொண்டுவரப்படும் பொற்கட்டிகளையெல்லாம் உரைத்துப் பார்ப்பான். அப்படி உரைக்குங்கால் பொன் துகள் அக்கல்லில் ஒட்டிக்கொள்ளும். அதை ஒரு மெழுகு உருண்டை கொண்டு ஒற்றி எடுத்துக்கொள்வான். இவ்வாறு ஒற்றிக்கொண்டு வர நாளடைவில் அம்மெழு குருண்டை பொன் பொடி நிறைந்துவிடும் அதை உருக்கிப் பொன்னை வேறாக்கி எடுத்துக்கொள்வான். இதுபற்றி நம் பழந்தமிழர் "எத்தாக ஒற்றினாலும் தட்டான், பொன்னாக விளைந்ததாம் உருண்டை" என்று ஒரு பழமொழி கூறினர். இச்சிறந்த பழமொழியில் "ஒற்றினாலும்",

# நூதன மார்வாடி

(ஏ. ஆர். ராஜகோபாலன்.)



## 6-வது அத்தியாயம்

### மர்ம வீடு

மாலை ஆறு மணிக்கு விழித்தெழுந்த கருணாகரன் தன் மாலைச் சிற்றுண்டியை முடித்துக்கொண்டு, பாஸ்கர விலாஸிலிருந்து புறப்பட்டு, 190-ம் நம்பரை நோக்கி—அதாவது கோடியிலிருந்த ஓட்டலை நோக்கி நடக்க வாரம்பித்தான்.

ஏனெனில் அந்த ஓட்டலின் மூலம் முகமூடியின் இருப்பிடத்தைக் கண்டுபிடிக்க நினைத்தான், கருணாகரன். ஆனால், தான் கவனிப்பது ஒருவருக்கும் தெரியக்கூடாது என்ற எண்ணத்தின்பேரில், அந்த ஓட்டலிருந்த சாரிக்கு எதிர்த்த சாரியில் நடந்துகொண்டிருந்தான் கருணாகரன்.

வெகு சீக்கிரத்தில் 190-ம் நம்பருக்கு நேர் எதிராக வந்த கருணாகரன், அப்பொழுது மிகவும் வேகமாக வந்து, அந்த ஓட்டலின் வாசலண்டை நின்ற காரைக் கவனித்தான்.

அந்தக் காரினுள் ஒரே ஒருவர்தான் உட்கார்ந்திருக்கிறார் என்பதையும், அது ஒரு டாக்ஸி என்பதையும் தெரிந்துகொண்டான் கருணாகரன்.

அந்த டாக்ஸியினுள் உட்கார்ந்திருக்கும் நபர் யார் என்பதைக் கூர்ந்து கவனித்தான் கருணாகரன்.

அவனால் வியப்பை அடக்கமுடியவில்லை! ஏனெனில்;

அந்த காரில் உட்கார்ந்திருப்பவர் ஒரு பெண்-அதுவும் ராமநாதனின் மனைவியும் காணாமற்போனவளும் ஆன ரமாமணி.

வெகு சிரமப்பட்டுத் தன் ஆச்சரியத்தை அடக்கிக்கொண்டு சுற்றிலும் திரும்பினான் கருணாகரன்.

---

“உருண்டை” என்னும் இரண்டு சொற்களும் அவற்றைப்போலவே ஒலிக்கும் இரு ஆபாசச் சொற்களாகத் திரிந்துவிட்டன.

சாதாரணமாக ஒருவர் பேசும்போது அவர் சொற்கள் இனிய ஓசையுடையனவாகவும் அறிவின்பாற் பட்டவையாகவும் இருத்தல்வேண்டும். அவ்வாறின்றி பேரிரைச்சலிட்டும் முரட்டுத்தனமாகவும் பேசுகின்றவர்களை நாம் பார்க்கிறோம். இவ்வாறு பேசுவோர்களைக் கண்டு நம் முன்னோர்கள் “சுதிமதி இல்லாமல் பேசுகிறாய்” என்று கூறுவது வழக்கு. சுதி=இனிய ஓசை; மதி=அறிவு.—அஃதாவது “இனிய வோசையும் அறிவும் இல்லாது பேசுகிறாய்” என்பது பொருள். இவ் வழக்குச் சொல்லில் முதலிலுள்ள “சு” என்ற எழுத்திலுள் உகர உயிர் நீங்கி வேறோர் உயிர் அடைந்ததால் கேட்பதற்கும் சகிக்காத சொல்லாகத் திரிந்து பின்னாட்களில் பாமர மக்களிடையே வழங்குவதாயிற்று.

கூப்பிடு தூரத்தில் மற்றொரு டாக்ஸி நின்றுகொண்டிருந்தது-காலியாக.

உடனே கருணாகரன் கைதட்டி அந்த டாக்ஸியைக் கூப்பிட்டான்.

அது அருகில் வந்தவுடன், "தயாராக இரு. அந்த டாக்ஸியைத் தொடர்ந்து செல்லவேண்டும்" என்று கூறியவண்ணம் அந்த வண்டியின் உட்புறத்தில் ஏறி உட்கார்ந்தான்.

அப்பொழுது ஓட்டலின் உட்புறத்திலிருந்து, அன்று காலையில் கருணாகரனை டெலிபோனில் பேசக்கூடாது என்று தடுத்த முரடன் வெளியில் வந்தான். சிறிது அவன் ரமாமணியுடன் பேசினான். உடனே ரமாமணி கீழ இறங்கி அந்த டாக்ஸி டிரைவரிடம் வாடகையைக் கொடுத்து அனுப்பிவிட்டாள்.

உடனே கருணாகரன் தான் உட்கார்ந்திருந்த வண்டியின் டிரைவரைப் பார்த்து, "அதோ! அவ்விருவர்களைத் தான் நான் தொடர்ந்து செல்லவேண்டும். ஆகையால் இங்கேயே நில்," என்று கட்டளையிட்டான்.

சிறிது நேரத்தில் அந்த ஓட்டலின் எதிரே ஒரு பெரிய போர்டு (Ford) கார் வந்து நின்றது. அதற்காகவே, காத்துக்கொண்டிருந்த ரமாமணியும், முரட்டு மனிதனும் காரில் ஏறிக்கொள்ள உடனே அது சென்றது.

"உம், ஆகட்டும்," என்றதும், கருணாகரன் இருந்த டாக்ஸியும், அதைப் பின் தொடர்ந்தது.

இரு மோட்டார்களும் ஒன்றன்பின் ஒன்றாக, சற்று தூரத்தில் போய்க்கொண்டிருந்தன.

முதலில் சென்ற மோட்டார், பல சந்து பொந்துக்களைத் தாண்டிக்கொண்டு, கடைசியில் ஊருக்கு வெளிப்புறத்தி லிருந்ததொரு, தோப்பை யடைந்து அதனுள் சென்று மறைந்தது. உடனே தோப்பின் வெளிக்கதவும், மூடிப் பூட்டப்பெற்றது.

தோப்பிற்குச் சிறிது தூரத்திலேயே நிற்கும்படியாகத் தனது டிரைவருக்குக் கட்டளையிட்டான் கருணாகரன்.

பிறகு சுற்றிலும் மெதுவாகத் தன் பார்வையைத் திருப்பினான் கருணாகரன். அத்தோப்பின் இடது சாரியில் சிறிய வீடுகள் வரிசையாக இருந்தன. வலது பக்கத்தில் ஒரே ஒரு பெரிய மாடி வீடு மட்டும் இருந்தது. அது பார்வைக்குக் கம்பீரமாக இருந்ததுடன் நீள அகலத்துடன் கூடி, மூன்று மாடிகளையுடையதா யிருந்தது. ஆனால் அது நெடுநாள் காலியா யிருந்திருக்க வேண்டுமென்று அதன் மாசு படிந்த சுவர்களின்மூலம் தெரிந்தது. தவிர, அப்போதுதான் அக்கட்டடத்தைச் சீர்திருத்தம் செய்ய முயற்சி செய்கிறார்கள் என்றும் தெரிந்தது. ஏனெனில் கீழ்ச் சுவர்களெல்லாம் நன்றாக வர்ண மடிக்கப்பட்டிருந்தன. தவிர முதல் மாடிக்கு வெளியில் வர்ணம் அடிப்பதற்காக ஒரு ஓரத்தில் சாரப்பலகை யொன்று (Scaffold) தொங்கிக் கொண்டிருந்தது. அதன் பக்கத்தில் ஒரு நீளமான ஏணி வைக்கப்பட்டிருந்தது. ஆனால் அந்த வீட்டின் வாசற் கதவு மூடிப் பூட்டப் பெற்றிருந்தது.

இதை யெல்லாம் மிகவும் கவனத்துடன் கருணாகரன் பார்ப்பதைக் கவனித்த டிரைவர், "ஐயா! சில மாதங்களுக்குமுன் இந்த வீடும் தோப்பும் இன்னொருவருக்குச் சொந்தமா யிருந்தபோது, இத் தோப்பு எப்பொழுதும் திறந்து வைக்கப்பட்டிருக்கும். ஆனால் இப்பொழுதோ, எப்பொழுதும் மூடி வைக்கப்பட்டிருக்கிறது. இந்த வீட்டிற்கு நான்கு வாசற்புறங்கள் உண்டு; அவைகளும் எப்பொழுதும் முன்பு திறந்து வைக்கப்பட்டிருந்தன. ஆனால் இப்பொழுது மூடப்பட்டிருக்கின்றன.

"இந்த வீட்டில் பேய் பிசாசுகள் இருப்பதாகப் பக்கத்திலுள்ளவர்கள் சொல்லிக் கொள்ளுகிறார்கள். ஆகையால்தான் இதில் எவரும் குடி வரவில்லை. ஆனால் மூன்று மாதங்களுக்குமுன் யாரோ ஒரு பெரிய தனவந்தர் இந்த வீட்டையும் இதைச் சேர்ந்த தோப்பையும் இதன் சொந்தக்காரரிடமிருந்து விலைக்கு வாங்கிக்கொண்டாராம்! அதிலிருந்தே இத்தோப்பும் வீடும், இப்படிச் சாத்தப்பட்டுக் கிடக்கின்றன.

"இந்த வீட்டைச் சுற்றிலும் பெரிய மர்மம் இருக்கிறதென்று பலரும் சொல்லிக்கொள்ளுகிறார்கள். ஆனால் அது எதுவரையில் உண்மை யென்று எனக்குத் தெரியாது. பாதி ராத்திரியில் யாரோ அலறுவதுபோல் இந்த மாளிகையிலிருந்து சப்தம் கேட்பதாகப் பக்கத்திலுள்ளவர்கள் சொல்லிக் கொள்ளுகிறார்கள். பாதிராத்திரியில் இங்கு கார்கள் வருவதும் போவதுமாகவும் இருப்பதாகச் சிலர் பேசுகிறார்கள்.

"இப்படிப்பட்ட வீட்டை எதற்காக இத் தனவந்தர் வாங்கியிருக்கிறார் என்பது எல்லோருக்குமே புரியவில்லை," என்று கூறி முடித்தான் டிரைவர்.................

கருணாகரனுக்கு ஆச்சரியம் அதிகமாயிற்று. அவனுக்குப் பேய் பிசாசுகளின்மீது நம்பிக்கையில்லை யாதலால், இதில் ஏதோ மர்மம் இருக்கிறதென்று நினைத்தான். அப்பொழுது தன் கைக்கெடியாரத்தைப் பார்த்த கருணாகரன் சரியாக மணி 7 அடித்திருப்பதைக் கண்டான். அவனுக்கு ஆச்சரியம் அதிகமாயிற்று. இன்னும் ரமாமணியும், அம் முரட்டு மனிதனும் திரும்பவில்லை.

அந்த வீதி அப்பொழுது நிசப்தமாக இருந்தது. கருணாகரன் தான் இன்னும் அதிக விஷயங்களைத் தெரிந்துகொள்ள விரும்பினான். ஆகையால் உடனே காரை விட்டு இறங்கி, மணிபர்ஸிலிருந்து இரண்டு பத்து ரூபாய் நோட்டுக்களை யெடுத்து டிரைவரிடம் கொடுத்து, "நீ இங்கிருந்து, காரைத் திருப்பிக்கொண்டு முதலில் நான் சந்தித்த இடத்திலேயே தங்கியிரு. நான் ராத்திரி திரும்பவும் உன்னை அமர்த்திக்கொள்வே னென்று நினைக்கிறேன். தெரிகிறதா," என்றான்.

உடனே டிரைவர், "சரி! அப்படியே செய்கிறேன்" என்று சொல்லி, பதிலை எதிர்பார்க்காமல், உடனே காரை ஓட்டிக்கொண்டு போய்விட்டான்.

அரசகேசரி மிகவும் சந்தோஷப்பட்டார். ஏனெனில் அவர் எப்பொழுதும் இது மாதிரி குணமுள்ள ஆட்களைத்தான் மெச்சிக்கொள்வார். பதில் பேசி நேரத்தை வீணாக்காமல் உடனே போய்விட்டா னல்லவா, டிரைவர்!

தவிர, டிரைவர் ஏன், வாய் திறக்கிறான்; ஏனெனில் அவன் எதிர் பார்த்ததற்குமேல் மூன்று பங்கு கூலி யல்லவா, அவனுக்கு இப்பொழுது கிடைத்திருக்கிறது!

டாக்ஸி கண் பார்வையிலிருந்து மறைந்தவுடன் கருணாகரன் தோப்பினோரத்திற்குச் சென்று, அங்கு வெளிப்புறத்தில் அடர்த்தியாயிருந்த ஒரு புதரினிடை மறைந்துகொண்டான்.........ஐந்து நிமிஷ நேரம் கழித்து, வீரமார்த்தாண்டனின் உருவம் அங்கிருந்து எழுந்தது.

வீரமார்த்தாண்டன் தோப்பின் வெளிக் கதவு பூட்டப்பட்டிருந்ததால் அதைத் தாண்டிக் குதித்து உட்பக்கம் போக நினைத்தான்.

அப்பொழுது அத்தெருவின் கோடியில் மோட்டார் வரும் சப்தம் கேட்டது. அது மிகவும் பிரகாசமான விளக்கையுடையதா யிருந்ததால் வீதியின் இரு புறமும், பளிச்சென்று தெரிந்தன.........ஆனால் வீரமார்த்தாண்டன் ஒரு பெரிய மரத்தின் பின்பக்கத்தில் நன்றாக ஒளிந்துகொண்டதனால் அவ் வெளிச்சம் வீரமார்த்தாண்டனைத் தொடவில்லை.

அப்பொழுது கருப்பு உடையில் மறைந்திருந்த வீரமார்த்தாண்டனின் உருவம், இருட்டோடு-நிழலோடும் கலந்திருந்தது..........

மோட்டார் தோப்பினருகில் வந்து நின்றது. அதை ஓட்டிவந்த மனிதன் அலங்கோலமாக ஓடிவந்து தோப்பின் வெளிக் கதவைத் தட்டினான். சற்று நேரம் வரையில் சந்தடியில்லை. மீண்டும் படபடவென்று தட்டினான். அப்பொழுது உட்புறத்தினின்றும் ஒரு முரட்டு மனிதன் அந்தக் கம்பிக் கதவின் வழியாக வெளியே பார்த்து 'யாரது?' என்று அதட்டினான்.

“எனக்கு என் குழந்தை வேண்டும். பாதகர்களே! என் மனைவியை அநியாயமாகக் கொலை செய்துவிட்டீர்களே; தயவுசெய்து என் குழந்தையையாவது திருப்பிக் கொடுங்கள்,” என்று காரினின்றும் வந்த மனிதன் கத்தினான்.

முரட்டு மனிதன்:—முட்டாளே! நீ எங்கு வந்திருக்கிறாய் என்று தெரிகிறதா? ஏன், அநாவசியமாகக் கத்துகிறாய்? போலீஸ்காரர்களை வரவழைக்க வேண்டுமென்பது உன் எண்ணமா?

இம் மனிதன்:—“ஐயோ! இல்லை! நான் அதை நினைக்கவே யில்லை. என் குழந்தையைத் தயவுசெய்து திருப்பிக் கொடுத்துவிடுங்கள். நான் போய்விடுகிறேன்.'

முரடன்:—“சரி! இப்பொழுது எஜமானன் வேலையா யிருக்கிறார். இன்னும் இரண்டு மணி நேரம் கழித்து வா!—அதாவது சரியாக 9 மணிக்கு வா! இங்கே யிருந்து சந்தடி செய்தால் உன் குழந்தையின் உயிருக்கும் கேடு வரும்; ஜாக்கிரதை.”

இம் மனிதன்:—சரி! நான் 9 மணிக்கு மீண்டும் வருகிறேன். என் குழந்தைக்கு மட்டும் யாதொரு கெடுதியும் செய்யாதீர்கள்.”

என்று சொல்லியவண்ணம் காரைப் பார்த்துத் திரும்பினான். வெகு சீக்கிரத்தில் காரும் மறைந்தது.

# நூதன மார்வாடி

இப்பொழுது வீரமார்த்தாண்டன் பல விஷயங்களைத் தெரிந்துகொண்டான்.

'இப்பொழுது வந்தவன் புருஷோத்தமன் என்றும், சற்று நேரத்திற்கு முன்தான், அவன் கொலை செய்யப்பட்டுக் கிடந்த தன் மனைவியைப் பார்த்திருக்க வேண்டுமென்றும், அதன்பேரில் யார் அந்த வேலையைச் செய்திருக்க வேண்டுமென்று தெரிந்துகொண்டு இவ்விடம் வந்திருக்கவேண்டுமென்றும்' தெரிந்துகொண்டான். 'ஆனல் ஏன் புருஷோத்தமன் இவ்வளவு பயப்படவேண்டும்! ஏன் போலீசாரைக் கூட்டிக்கொண்டு வந்து தன் குழந்தையை மீட்டுக்கொள்ளக் கூடாது! அவனுக்குத்தான் இந்த இடம் தெரிந்திருக்கிறதே' என்றெல்லாம் வீரமார்த்தாண்டன் எண்ணினான்.

தன் சந்தேகங்களுக்கெல்லாம் புருஷோத்தமனுடன் பேசினல் சரியான விடைகளைத் தெரிந்துகொள்ளலாம் என்றெண்ணினான் வீரமார்த்தாண்டன்.

அப்பொழுது திடீரென்று ஒரு பெண் வீரிட்டலறிய சப்தம் கேட்டது. அது தோப்பின் உட்புறத்திலிருந்து வந்ததென்பதைத் தெரிந்துகொண்ட வீரமார்த்தாண்டன் தோப்பினுள் பிரவேசிக்க எண்ணினான்.

ஆனல் சற்று முன்பு நடந்த சம்பவங்களிலிருந்து வாசலண்டை யாரோ முரட்டு மனிதன் காவல் காத்துக்கொண்டிருக்கிறுனென்பதை தெரிந்துகொண்டான்.

பின் எப்படி உள்ளே போவது? சடேரென்று வீரமார்த்தாண்டனுக்கு ஒரு யோஜனை தோன்றிற்று. உடனே ஏணி வைக்கப்பட்டிருந்த இடத்தை நோக்கி நடந்து, ஏணியில் கிடுகிடுவென்று ஏறி அங்கு வர்ணம் அடிப்பதற்காகக் கட்டப்பட்டிருந்த சாரப் பலகையின்மீது ஏறி அங்கிருந்து, தோப்பினுள்ளே நோக்கினுன். உள்ளே அவன் கண்ட காட்சி அவனைத் திடுக்கிடச் செய்தது.

அங்கு மூன்று மோட்டார்கள் நின்றுகொண்டிருந்தன. இரண்டு மோட்டார்கள் சுவரின் பக்கம் நிறுத்திவைக்கப்பட்டிருந்தன. மூன்றுவது மோட்டார் எதிர்ப் புறமாக நிறுத்தப்பட்டிருந்தது. அது ரமாமணியை ஏற்றிவந்த வண்டி.

இவற்றின் இடையில் ஐந்தாறு முரட்டு மனிதர்கள் நின்றுகொண்டிருந்தார்கள். அவர்களில் இருவர் ரமாமணியைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டிருந்தனர். ஒருவனுடைய அழுக்கு கை ரமாமணியின் வாயைப் பொத்திக்கொண்டிருந்தது.

"அவர்கள் சற்று நேரத்திற்குமுன் புருஷோத்தமன் வந்தபோது, எங்கு ரமாமணி கூச்சலிடப் போகிருளோ என்றெண்ணி அவள் வாயை அடைத்துக்கொண்டிருந்தார்கள்," என்று எண்ணினுன் வீரமார்த்தாண்டன்.

(தொடரும்.)